




# இப்போது! வைஸின்.

# கலங்கிய கண்களிலே கதிரொளி மீட்பது வைஸின்

கரித்தாலும், களைப்படைந்தாலும், கூசினாலும், கண்களைக் கசக்காதீர்கள், சிவந்த கண்களை நிமிட நேரத்தில் இதமுடன் தெளிவாக்குவதற்கு வைஸின் இருக்கிறது. வன்மை வாய்ந்தது. எனினும் மென்மை கனிந்தது. உலகெங்கும் டாக்டர்கள் சிபாரிசு செய்வது வைஸின்.

சில்லறை விலை ரூ. 2.97 (தல வரிகள் தனி)

**சிவந்த கண்களை ஒரே நிமிடத்தில் தெளிவாக்குவது வைஸின் ஒன்றுதான்.**

பரிட்சித்துப் பார்க்க இதோ வழி:
உங்கள் கண்கள் சிவந்திருக்கக் கண்டால், இதோ எளிய வைஸின் சிகிச்சை: ஒரு கண்ணிலே 2 சொட்டு வைஸின் விட்டுக்கொள்ளுங்கள். ஒரு நிமிடம் கழித்துக் கண்ணாடியில் காண்பீர்கள் அத்தாட்சி — ஒரு விழியிலே சிவப்பு, மறு விழியிலே தெளிவு. (இனி, சிவந்த விழியிலும் வைஸின் இட்டு, தெளிவாக்குங்களேன்).

**கண்களை ஒருபோதும் கசக்கவேண்டாம்... கரிக்கும் கண்களுக்குத் தேவை வைஸின்.**

பைஸர் தயாரிப்பு. Pfizer "உலக நலனை நாடிடும் விஞ்ஞானம்"

Pfizer

லின்டாஸ்-PZ. VI.3-140 TM






# sri kamakshi suprabhatam

and other songs in praise of sri kamakshi



Rendered by

# M.S.SUBBULAKSHMI

ஆலயங்கள் நிறைந்த அழகு நகர் காஞ்சியிலே அருளாட்சி புரியும் அன்னை காமாட்சிதனை காலையிலே கரங்குவித்து சிரம் தாழ்த்தி இவ்வாறு வேண்டுகின்றனர் பக்தர்கள். அன்னையின் கருணை ஒளி வீசும் கண்களும், அருள் கனிந்த புன்னகை முகமும் அலைபாயும் மனதிற்கு அமைதியூட்டும்.

அன்னை அருள் பெற்ற ஆசுகவிப் பாவலர்கள் ஈடில்லா அவள் புகழும், எல்லையில்லா அவள் அருளும் எண் திசையும் மணக்கும் வண்ணம் பல் வேறு பாமாலை படைத்திட்டார்கள்.

அவற்றினுள்ளே சிறப்பாகும் காமாட்சி சுப்ரபாதம் எனும் இந்த இளங்காலை இறைவணக்கம்.

சமஸ்கிருதத்தில் அமைந்துள்ள இப் பாடலை எச்எம்வி எல்பி இசைத்தட்டில். (ECSD 3254) இனிமையான குரலில் இசைத்துள்ளார் திருமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி. இத்துடன் அன்னை புகழ் பாடும் பல்வேறு கீர்த்தனங்கள் இடம்பெறும் இந்த இசைத் தட்டில்

அமுத இசை கேட்டிடுவீர்!
அன்னை ஆசி பெற்றிடுவீர்!



தி கிராமபோன் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்

GC/7939




ஆபத்சன்யாசம்

பொன்முட்டை






# கள்ளக் கடத்தலுக்கு ஒரு மந்திரி!

பாரத புண்ணிய பூமி என்ற பெயரைக் கள்ளக் கடத்தல்காரர்களின் சொர்க்கம் என்று மாற்றிவிடலாம் போலிருக்கிறது ! அந்த அளவுக்கு அவர்களின் ஆதிக்கம் இங்கே மேலோங்கிவிட்டது. இதைத் தடுக்க ஒன்றும் செய்ய முடியாமல் அமைச்சர் கே. ஆர். கணேஷ் கையைப் பிசைகிறார். இன்னும் கொஞ்ச நாட்களில் கையை விரித்து விட்டாலும் வியப்பதற்கில்லை!

நாடாளுமன்றத்தில் திரு கணேஷ் தம்மைக் கள்ளக் கடத்தலுக்குப் பொறுப்பேற்றுள்ள மந்திரி என்பதாக வர்ணித்துக்கொண்டு நகைப்புக்குள்ளானார்.

ஆனால் யோசித்துப் பார்த்தால் அவர் வாய் தவறுதலாகக் கூறிய வார்த்தைகளிலும் பிசகு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை.

எந்த அரசாங்கத்தில் கட்டுப்பாடுகள் மிகுதியோ அந்த நாட்டில் கள்ளத்தனமும் அதிகரிக்கும். கள்ளப் பணம், கள்ளச் சந்தை, கள்ளக் கடத்தல் எல்லாம் கொழிக்கும். ஆக நமது பொருளாதாரக் கொள்கைகள் மாறுதவரை அமைச்சர் கணேஷ் கள்ளக் கடத்தலுக்குப் பொறுப்பேற்றுள்ள மந்திரியாகத்தான் விளங்குவார்.

மக்கள் எல்லோருமே காந்திஜியாகவோ அல்லது சங்கராச்சாரியாராகவோ மாறிவிட முடியாது. ஆசைகளைக் கோடானுகோடி மக்களும் துறந்துவிட வேண்டும் என இந்திரா அரசு எதிர்பார்ப்பது பேதைமை. கொஞ்சம் தங்கம் வைத்துக்கொள்ள வேண்டும், அல்லது ஒரு நல்ல கைக்கடிகாரம் அணிந்து கொள்ள வேண்டும், இல்லாதபோனால் கையடக்கமான சிறந்த காமிரா ஒன்றைத் தன் உடைமையாக்கிக் கொள்ள வேண்டும் என்றெல்லாம் மக்கள் ஆசைப்படுவது இயல்பு. இந்த இயற்கை வேகத்துக்குக் கட்டுப்பாடு விதிக்கப் பார்ப்பது அறியாமை. அது வெற்றி பெறாது. அரசாங்கத்தின் சட்ட திட்டங்கள் மனித இயல்புகளைப் புரிந்துகொண்டு உருவானவையாக இருக்க வேண்டும்.

ஓரளவு இறக்குமதிகளை அனுமதிப்பது மட்டும் போதாது. இறக்குமதியாகும் பொருள்கள் மீது அபரிமிதமான வரிகள் விதிக்காமலும் இருக்க வேண்டும். வரிகள் காரணமாக விலை உயர்வதும் கள்ளக் கடத்தலை ஊக்குவிக்கவே செய்யும்.

இறக்குமதிகளைத் தளர்த்துவதற்கு ஈடாக ஏற்றுமதிகள் பெருக, உற்பத்திக்கு இருக்கும் முட்டுக்கட்டைகளை நீக்கவும் முதலீடுகள் பெருக உள்ள இடையூறுகளைக் களையவும் வேண்டும்.

இதைச் செய்யாமல் மேன்மேலும் கட்டுப்பாடுகளை அதிகரிப்பதால் எந்த நோக்கத்தில் அவற்றைக் கொண்டு வருகிறார்களோ அந்த நோக்கமே நிறைவேறாது. கள்ளக் கடத்தல் காரணமாக அரசுக்கு நியாயமாகக் கிடைத்திருக்க வேண்டிய வரி வருமானம் எவ்வளவு நஷ்டமாகிறது என்று அமைச்சர் கணக்குப் பார்க்கட்டும். மலைக்க வைப்பதாக இருக்கும்.

'கள்ளக் கடத்தல்காரர்களுக்கு மேலிடங்களில் ஆதரவு இருக்கிறது; நான் என்ன செய்வேன்?' என்று அழாத குறையாகக் கேட்கிறார் கணேஷ். இதற்கு மேல் விளக்க அவர் பயப்படுகிறார். ஆனால் நமக்குப் புரியாமல் போகவில்லை.

அமைச்சர் முதல் கடைநிலை அதிகாரி வரை அனைவருக்கும் கள்ளக் கடத்தல்காரர்கள் கப்பம் செலுத்தி வருகிறார்கள். கட்டுமரத்தில் ஏற்றி வரும் ஆசாமி முதல் கப்பல் கப்பலாகக் கொண்டு வந்து இறக்கும் பேர்வழி வரை அனைவரும் லஞ்ச ஊழலுக்கும் தேர்தல் தில்லுமுல்லுகளுக்கும் உதவி வருகிறார்கள். எனவே இந்த அரசையே கள்ள அரசு என்று வர்ணிப்பதில் தவறில்லை.

அமைச்சர் கணேஷ் கள்ளக் கடத்தல்காரர்களிடம் மன மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறாராம்! பாவம், நடவடிக்கை எடுக்க முடியாமல் தவிக்கும் அவர் கள்ளக் கடத்தல்காரர்கள் வீடுகளின் முன்னால் சத்தியாக்கிரகம் செய்கிறேன் என்கிறார். காந்தி ஜயந்தி தினத்தை இதற்குத் தேர்ந்தெடுத்திருக்கிறார்.

அடடா! அண்ணலின் ஆன்மா குளிர்ந்து போகும்!


கல்கி

மலர் 34

இதழ் 6




தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



# கல்கி

ஆனந்த ஆவணி 23 — செப்டம்பர் 8, 1974

## உங்களுடன் ஒரு நிமிஷம் ...

சென்ற இதழ் மேலட்டையில் ஸ்ரீ காமாட்சியையும் நமது ஆசாரிய சுவாமிகளையும் ஒருங்கே தரிசிக்கும் வாய்ப்புப் பெற்ற நேயர்கள் புளகாங்கிதமுற்று எழுதியிருக்கிறார்கள்.

ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் வழங்கும் ஸ்ரீ காமாட்சி சுப்ரபாத இசைத்தட்டை செப்டம்பர் எட்டாந் தேதி ஞாயிற்றுக்கிழமை சென்னை, கபாலீச்வரர் கோயில் கற்பகாம்பாள் நவராத்திரி மண்டபத்தில் ஜஸ்டிஸ் மகராஜன் தலைமையில் ஸ்ரீ ஏ. வி. மெய்யப்ப செட்டியார் வெளியிடுகிறார். அதே தினத்தில் வேறு பல நகரங்களிலும் வெளியீட்டு விழாக்கள் நடக்கின்றன. பங்களூரில் மல்லேச்வரம் ராம மந்திரத்தில் நடைபெறும் விழாவில் திரு எச். வி. ஆர். ஐயங்கார் பங்கு பெறுகிறார். வாரணாசியில் அன்னை ஆனந்தமயி ஆசிரமத்தில் விழா நடப்பது மிகப் பொருத்தம். மகா மகோபாத்தியாய ஸ்ரீ கோபிநாத் கவிராஜ்ஜி இங்குமுதல்இசைத்தட்டை வழங்குவார். திரு டி. வி. ராமானுஜமும் திரு பால்கிவாலாவும் பங்குபெறும் விழா மாதுங்கா தென் இந்திய பஜனை சமாஜக் கூடத்தில் நடக்கிறது. கல்கத்தாவில் டாக்டர் முகர்ஜியும் ஸ்ரீ கிரிதாரிலால் மேத்தாவும் இந்த இனிய வைபவத்தில் ஈடுபடுகிறார்கள். டாக்டர் கரண்சிங் புதுதில்லியில் வித்தல்பாய் பட்டேல் ஹவுஸில் இசைத்தட்டை வெளியிடுகிறார்.

இந்த விழாக்களின்போது சதாசிவம் தம்பதி கிழக்காசிய சுற்றுப்பயணத்தில் இருப்பார்கள். மணிலாவில் மக்ஸேஸே விருது பெற்றபிறகு அங்கும் வேறு பல முக்கிய நகரங்களிலும் ஸ்ரீமதி எம். எஸ்ஸின் கச்சேரிகள் நிகழ்ந்து கொண்டிருக்கும். சதாசிவம் தம்பதியும் இசைக் குழுவினரும் வெற்றிகரமாகச் சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு திரும்பக் காமாட்சி அன்னையின் அருளை வேண்டுகிறோம்.

—ஆசிரியர்

“கல்கி”யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



# புரியவில்லை ஆண்டவனே!

“தம்பி !''

''என்ன அண்ணே ?''

''சினிமா டிக்கெட்டுங்களெல்லாம் விலை ஏறிப் போச்சு. காட்சி வரி, கேளிக்கை வரி எல்லாத்தையும் உயர்த்திட்டாங்க.''

''கெடக்குது விடு, ரெண்டு சினிமாப் பார்க்கற இடத்திலே ஒரு சினிமாப் பார்த்துட்டுப் போறோம். ஆனா ஒரு சந்தேகம்.''

''என்ன தம்பி ?''

''வரி வசூலெல்லாம் அரசு திட்டமிடுகிற அளவுக்கு நடக்கவில்லை என்று முதல்வர் குறைப்பட்டுக் கொள்கிறாரே. அதுக்கு என்ன அர்த்தம் ?''

''வரி வசூல் அதிகாரிகளின் திறமைக் குறைவாக இருக்கணும் ; அல்லது லஞ்ச ஊழல் தாண்டவமாடுவதா யிருக்கணும்.''

''அதைச் சீர்ப்படுத்தாமே வரி விகிதங்களை மட்டும் உயர்த்திக்கிட்டுப் போனா என்ன பிரயோஜனம் ?''

''புரியவில்லை, ஆண்டவனே !''

* * *

''தம்பி! குடும்பக் கட்டுப்பாட்டுக்காக அறுவைச் சிகிச்சை செய்துக்கிறவங்களுக்கு ஹரியானாவில் பணம் தவிர ஐந்து மூட்டை சிமெண்ட் கொடுக்கிறாங்களாம், நியாய விலையில்!''

''சிமெண்ட் மூட்டை தேவைப்படாதவங்ககூட இதை வாங்கிக்கலாம், இல்லையா?''

''ஓ! பேஷாக! அப்புறம் அதை பிளாக்கில் விற்கவும் செய்யலாம்!''

''அப்படியானால் அரசே, கறுப்புச் சந்தைக்கு நேரடியாக ஊக்கம் அளிப்பதாகத் தானே ஆகும்? இது நியாயமா?''

''புரியவில்லை, ஆண்டவனே !''

* * *

''தம்பி ! பாகிஸ்தான் ஆட்டக்காரங்க இங்கிலாந்தில் அறுநூறு ரன்கள் எடுத்து டிக்ளேர் செய்திருக்காங்க, பார்த்தியா ?''

''இங்கிலாந்து ஆட்டக்காரங்களும் ஒன்றும் குறைஞ்சு போயிடலையே! அவங்களும் ஐந்நூற்று நாற்பத்தைந்து எடுத்து ஃபாலோ ஆன் தவிர்த்துட்டாங்களே! மாட்சுதான் 'ட்ரா' ஆயிடுச்சு.''

''அது சரி தம்பி! பாகிஸ்தான் நல்லா ஆடின நம்ம ரசிகர்களிலே சிலர் ஐயோன்னு தலையில் கையை வைச்சுக்கிட்டு உட்கார்ந்துட்டாங்களே, ஏன்?''

''இந்தியா இங்கிலாந்திடம் தோற்றுடுச்சு. இப்போ பாகிஸ்தான் இங்கிலாந்தை ஜெயிச்சுட்டா இந்தியாவைப் பாகிஸ்தான் வென்றதாக ஆகிவிடுமே என்ற கவலையாயிருக்கும்!''

''ஜெயிச்சுட்டுப் போகட்டுமே! பாகிஸ்தான் ஆட்டக்காரங்க என்ன யானையாகாளு? அல்லது புலியாகாளு? எதுக்குக் குடிமுழுகிட்ட மாதிரி இடிஞ்சு போகணும் நாம் ?''

''புரியவில்லை, ஆண்டவனே !''

* * *

''அண்ணே ! வேலை வாய்ப்புத் திட்டம் என்பதாக மத்திய அரசு ஒன்றை ஆரம்பிச்சு அதுக்கு இத்தனை கோடி செலவழிப்போம் என்று தீர்மானித்தது.''

''தெரியுமே! அதில் முக்காலே மூணு வீசம் பணத்தைக் கண்டிராக்டருங்க விழுங்கி ஏப்பம் விட்டுட்டாங்களாம். இடையில் யாருக்காவது உள்ளங்கை அரிச்சிருந்தாலும் அதிசயமில்லை. எப்படியோ நூற்றி எழுபது கோடி ரூபாயைச் சாக்கடையில் கொட்டியதாக ஆயிற்று !''

''அண்ணே ! வேலை வாய்ப்புப் பெருக இவ்வளவு தொழிலகங்கள் உருவாகணும், இத்தனை சாலைகள் போடணும் என்று திட்டம் வகுக்காமல் இத்தனை பணம் செலவழிப்போம் என்று திட்டமிடுவது ?''

''ஆபத்தம்தான், தம்பி ! அத்துடன் தனியார்த் துறைக்கு ஊக்கமளித்து அவங்களை மேன்மேலும் புதுத் தொழில்களில் முதலீடு செய்யுமாறு தூண்டி அவங்க பொறுப்பைச் சரியாக நிறைவேற்றுகிறாங்களா என்று மட்டும் கண்காணித்துக் கொண்டு போவது சுலபம். அதை விடுத்து நானே எல்லாத்தையும் செய்யறேன்னு அரசாங்கம் அட்சதையைத் தன் தலையில் போட்டுக்கிட்டு முன் வந்து நாம் கொடுக்கிற வரிப் பணத்தைப் பாழாக்குதே, ஏன் ?''

''புரியவில்லை, ஆண்டவனே !''

* * *

''அண்ணே ! அரசாங்கத்தின் உணவு தானிய விநியோகக் கொள்கைகள் காரணமாக விலைகள் குறைந்திருப்பதுடன் சுலபமாகக் கிடைக்கவும் செய்கின்றன என்று பாராளுமன்றத்தில் ஷிண்டே கூறி யிருக்கிறார்.''

''அது சரி தம்பி. ஆனால் அவரே மொத்த வியாபாரத்தில் கோதுமை, அரிசி விலைகளெல்லாம் எல்லா மாநிலங்களிலும் உயர்ந்துவிட்டதாக ஒப்புக் கொண்டிருக்கிறாரே !''

''முன்னுக்குப் பின் முரணாக ஒரு மந்திரி ஒரே நாளில் ஒரே இடத்தில் ஒரே சமயத்தில் பேசினால் என்ன அர்த்தம்?''

''புரியவில்லை, ஆண்டவனே !''

''இப்ப எனக்கு நல்லாப் புரியுது அண்ணே! இதற்கெல்லாம் பெயர் சிந்தனைக் குழப்பம் அண்ணே! சிந்தனைக் குழப்பம் !''



# ஏட்டிக்குப் போட்டி

அரிசி படி நாலு ரூபாய்க்கு மேல் விற்கிறது. இதோடு மட்டும் நிற்கும் என்று கருதாதீர்கள். இன்னும் சில மாதங்களில் இது மேலும் உயரத்தான் போகிறது. மக்கள் கஷ்டப்படப் போகிறார்கள்.

— அமைச்சர் திரு ப. உ. சண்முகம்.

ஆகா ! என்னே மதியூகம்! 'மந்திரிக்கழகு வரும் பொருள் உரைத்தல்' என்ற பொன்னுரையை எவ்வளவு அழகாக விளக்கிவிட்டார் !

சத்தியவாணிமுத்து சொல்லுவதிலும் ஒரு 'பாயிண்ட்' இருக்கிறது. அரசின் நிலை பற்றிச் சட்ட அமைச்சர் மாதவன் சொன்ன விளக்கத்திலும் ஒரு 'பாயிண்ட்' இருக்கிறது.

— சட்டசபையில் டாக்டர் ஹாண்டே.

ஆமாம். டாக்டர் ஹாண்டே சொல்லுவதிலும் ஒரு 'பாய்ண்ட்' இருக்கிறது. அவரைப் போன்ற அரசியல்வாதிகளுக்கு எந்தக் கட்சியிலும், யாரிடத்திலும் ஒரு 'பாய்ண்ட்' கிடைத்துவிடும். அதுதான் நாம் அவரிடத்தில் குறிப்பிட வேண்டிய 'பாய்ண்ட்'!

கல்வி நிலையங்களிலும், கல்லூரிகளிலும் நிர்ப்பந்தப்படுத்திக் கட்டாயமாகத் தங்களிடமிருந்து நன்கொடை வசூலித்தார்கள் என்று மூன்று, நான்கு பெற்றோர்களாவது புகார் கொடுக்க முன்வர வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்க முடியும்.

— நாவலர் நெடுஞ்செழியன்.

புகார் கொடுத்தவர்கள் மீதா ?

கோவை ஜெயிலில் கள்ள நோட்டு அச்சடிப்பு !

— பத்திரிகைச் செய்தி.

போகட்டும், அரசுக்குக் குற்றவாளியைப் பிடித்து ஜெயிலுக்கு அனுப்பும் வேலை மிச்சம்!

வீரவாஞ்சி சந்திப்பு என்று மணியாச்சிக்குப் பெயர் வைக்க ரயில்வே அமைச்சரிடம் வலியுறுத்தப்பட்டது!

— தமிழக முதல்வர்

சாதனைப் பட்டியல் நீள்வதற்கு இந்தப் 'பெயர் மாற்றம்' ஒத்தாசை செய்யும் !

கால்டெக்ஸ் போன்ற அன்னியக் கம்பெனிகள் சுரண்டலுக்கு முடிவுகட்ட அவற்றைக் கூடிய விரைவில் அரசுடைமையாக்க வேண்டும்.

— பரூவா, பெட்ரோலியம் ரசாயன மந்திரி.

ஆம், சுரண்டலை ஏகபோக உரிமையாக அரசு கைப்பற்ற வேண்டுமல்லவா ?

---

ராஜாஜி சிந்தனை

## தண்டனை பெறாத குற்றவாளி!

திருடினால் குற்றம். கொள்ளையடித்தால் குற்றம். கொலை செய்வது பயங்கரமான குற்றம். தேசத் துரோகமும் அப்படியே.

ஆனால் இதோ ஒரு பயங்கரமான குற்றவாளி இருக்கிறான். அவன் மீது நாம் கைவைக்கத் துணிவதில்லை !

நமது நாட்டை மீளமுடியாத கடனில் ஆழ்த்தித் திவாலா நிலைக்குக் கொண்டுவந்துவிட்ட குற்றவாளி அவன். அதோடு தான் செய்த குற்றத்தைப் பகிரங்கமாக ஒப்புக்கொண்டும் இருக்கிற குற்றவாளி.

மகமதியர் ஆட்சியில் தொடங்கி, மொகலாய அரசு காலத்திலும் பிரிட்டிஷ் ஆட்சியிலும் பிறகு இந்த நூற்றாண்டின் முதல் பாதி முடியும் வரையிலும் மிகவும் மதிப்பு மிக்கதாய் இருந்த ரூபாயை அடியோடு மதிப்பிழக்கச் செய்தவன் அவன்.

நாட்டைப் பாழாக்கிய இந்தப் பெரும் குற்றவாளியை யாரும் தேசத் துரோகி என்று அழைப்பதில்லை. அவனைக் குற்றவாளிக் கூண்டில் ஏற்றுவதுமில்லை. அதுமட்டுமல்ல, வெட்கங் கெட்டுப்போய் மீண்டும் ஆட்சியில் அமர வேண்டும் என்று ஆசைப்பட்டு அவன் நம் சம்மதத்தைக் கோருகிறான். அவ்வாறு கேட்க அவனை நாம் அனுமதிக்கிறோம் !

சுயராஜ்யா, ஜூலை 2, 1966

ஓம் சக்தி!



# திருவேற்காடு அருள்திரு
# தேவி கருமாரி அம்மன்
# தல வரலாறு
# வெளியீட்டு விழா

## அன்பர்களுக்கு அழைப்பு

எல்லாம் வல்ல பராசக்தியாக விளங்கிக் கொண்டு கலியுகத்தில் அநேக ஆயிரம் பக்தர்களைத் தன்னிடத்தே ஈர்த்து அவர்கள் குறைகளைப் போக்கி, நல்வாழ்வு அளித்துவரும், கருமாரி அம்மனின் புகழை இனிய தமிழில், வசன ரூபத்தில் எல்லோரும் பார்த்து, வாங்கி, படிக்குமளவில் உருவாகிவரும்

திருவேற்காடு அருள் திரு

**தேவி கருமாரி அம்மன் தல வரலாறு**

**என்னும் நூல் வெளியீட்டு விழா**

**மைலாப்பூர், எட்வர்ட் எலியட்ஸ் சாலை,**

**ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில்**

**செப்டம்பர் 13, 1974—வெள்ளிக்கிழமை**

காலை 8 மணியிலிருந்து இரவு 9 மணிவரை தொடர்ந்த நிகழ்ச்சிகளாக வெளிவர அன்னையின் அருள் கிடைத்திருக்கிறது.

**அன்று, தமிழக ஆளுநர், அறநிலைய அமைச்சர், அறநிலைய ஆணையர், நீதிபதிகள், மற்றும் பிரபல தமிழ் வல்லுநர்கள் இவ்விழாவில் கலந்து கொண்டு ஆராய்ச்சியுரைகளும், பேருரைகளும் செய்ய இருக்கிறார்கள்.**

இதைக் கண்ணுறும் அன்பர்கள் இதனையே அழைப்பாக கருதி விழாவிற்கு வருகை தந்து, தேவியின் அருளைப் பெறுமாறு வேண்டப்படுகிறது.

# சிவத்தின் சக்தி : நாராயண சகோதரி ⑤

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

ஆசைதான் அத்தனை அனர்த்தத்துக்கும் காரணம். ஆசைதான் 'காமம்' என்பது. ஆசைப்பட்டது கிடைக்காவிட்டால் குரோதம், சோகம் எல்லாம் உண்டாகின்றன. காமத்தில் பிறப்பு உண்டாகிறது. குரோதத்தால் நம்மை நாமே கொன்று கொள்கிறோம். எனவே, ஜனன மரணத்திலிருந்து விடுபட வேண்டுமானால் நம்மைக் காமமும் குரோதமும் அண்டவிடக் கூடாது. மழை ஜலம் உள்ளே புகவொட்டாமல் நல்ல டஃபேடா குடைத் துணி காப்பாற்றுகிறது. அதை 'வாடர் ப்ரூஃப்' என்கிறோம். இதேமாதிரி நமக்குக் காம ப்ரூஃபாக, க்ரோத ப்ரூஃபாக, சோக ப்ரூஃபாக ஒரு கவசம் இருக்கிறதா என்றால் இருக்கிறது. சாட்சாத் அம்பாளின் கிருபைதான் அந்தக் கவசம். நமக்கு ரொம்பப் பணம் இருக்கலாம், செல்வாக்கு இருக்கலாம், பவிஷு, கியாதி இருக்கலாம், அழகு ஆரோக்கியங்கள் இருக்கலாம். இவையெல்லாம் அம்பாள் அநுக்கிரகத்தால் கிடைத்ததாக நாம் சொல்லிக் கொள்ளலாம். ஓரளவுக்கு அப்படிச் சொல்வது வாஸ்தவமும்தான். ஆனாலும் ஆசையும், வெறுப்பும், பயமும், துக்கமும் மனசிலிருக்கிற வரையில் இதுகள் எல்லாம் கிடைத்துத்தான் என்ன? ஆனபடியால் **உண்மையில்** அம்பாள் அநுக்கிரகம் இருப்பதற்கு அடையாளம் நம்மை ஆசையும், துவேஷமும், பயமும், அழுகையும் தொடாமல் இருப்பதுதான்.

துவேஷம், பயம், அழுகை இவைகளுக்கும் மூலகாரணம் ஆசைதான், காமம்தான். எனவே காமம் ஒன்று தொலைந்தால் போதும். அத்தனை அனர்த்த பட்டாளமும் தொலைந்து போனதாக ஆகிறது. அதன்பின் இந்த உலகத்தில், இந்தச் சரீரத்தில் நாம் இருக்கிற போதே மோக்ஷ ஆனந்தம்தான்.

காமேச்வரி என்றும் காமாக்ஷி என்றும் பெயர் படைத்த பராசக்தியை மனமுருகிப் பிரார்த்தித்தால் அவள் நம் காமத்தை அடியோடு துவம்ஸம் செய்துவிடுகிறாள். காமேச்வரிதான் பஸ்மமாகிவிட்ட காமனை மறுபடி உண்டாக்கினவள். அதன்பின், காம தகனம் செய்த பரமேச்வரனுக்குக் காமம் பொங்குகிற மாதிரி தன் கண்களில் பிரேமை பொங்கப் பார்த்தவள்தான் காமாக்ஷி. இவளுடைய அநுக்கிரகத்தால் நமக்குக் காம ஜயம் ஏற்படும் என்றால் ஒன்றுக்கொன்று முரணாகத் தோன்றுகிறது. ஆனால் முரண் இல்லை. பரப்பிரம்மம் லோகப் பிரக்ஞையே இல்லாமல் இருந்துவிட்டால், மாயாலோகத்தில் மாட்டிக் கொண்டிருக்கிற நாம் எப்படி விடுபடுவது? நம்மை விடுவிக்கவே அதற்குக் காருண்யம் உண்டாகிறது. இந்தக் கருணையைத்தான் பரமேச்வரனுக்கு உண்டான காமம் என்று சொல்கிறோம். இந்தக் கருணை உணர்வு அவருக்குப் பிறப்பதற்குக் காரணமாயிருந்த சக்தியையே காமாக்ஷி என்கிறோம். சமஸ்த ஜீவராசிகளும் க்ஷேமமாக இருக்க வேண்டும் என்ற காமம் தவிர வேறு ஓர் ஆசையும் இல்லாத நிலை அது.

காமனை எரித்த பரமேச்வரனில் பாதியாக அவள் இருப்பதால் — நெற்றிக் கண்ணில் பேர் பாதி அவளுடையது — அவள் ஜீவப் பிரபஞ்சத்தின் காமத்தைப் பஸ்மமாக்குகிறாள். 'சிவனுக்குக் காமமூட்டிய நீயே பக்தர்களின் காமத்தை நாசம் செய்கிறாய்!' என்று மூகர் அடிக்கடி சொல்கிறார்.

சிவத்தின் சக்தி என்பதால் காமத்தை அவள் எரிக்கிறாள். நாராயண சகோதரியாகவும் இருக்கிறவள் அவள். நாராயணன் சாட்சாத் மன்மதனின் பிதாவாக இருக்கிறார். பலபேருக்கு பிரம்மா மகாவிஷ்ணுவின் பிள்ளை என்பது மட்டுமே தெரியும். ஆனால் மன்மதனும் அவர் பிள்ளைதான். மோகினியாக வந்தபோது அவர் பரமேச்வரனிடமே ஐயப்ப சாஸ்தாவை ஒரு புத்திரனாகப் பெற்றார். சிவ—சக்தி சேர்ந்து பிறந்த சுப்பிரமணியர் போன்றவர் ஐயப்பன். எனவே பரம ஞான மூர்த்தியாக இருக்கிறார். ஆனால் பிரம்மாவோ ஜன்மாவுக்குக் காரணமாயிருக்கிறார். ஒரு ஜந்து ஜனிக்கக் காரணமாக இருக்கிற காமத்தைத் தூண்டுகிறவனே மகாவிஷ்ணுவின் இன்னொரு பிள்ளையான மன்மதன். சகல ஜீவராசிகளையும் ஆட்டிப் படைக்கிற வல்லமை அவனுக்கு இருக்கிறது!

காமனைப் படைத்தவர் மகாவிஷ்ணு என்றால், நம் காமங்கள் போக அவர் அநுக்கிரகிப்பாரா? நிச்சயம் அநுக்கிரகிப்பார். ஸ்ரீராமன் மகாவிஷ்ணுவின் அவதாரம். 'ராமன் என்று சொன்னால் அங்கே காமன் வரமாட்டான்' என்கிறோம். அப்பா — பிள்ளையாயிற்றே, ஏன் இப்படி என்று கேட்கலாம். அப்பாவிடம் பிள்ளைக்கு உள்ள அபரிமித மரியாதையாலேயே அவர் இருக்கிற இடத்துக்கு வரமாட்டான்; அங்கே தன் வாலைச் சுருட்டிக் கொண்டுவிடுவான். துளஸிதாஸர் இப்படித்தான் வேடிக்கையாகப் பெரிய தத்துவத்தைச் சொல்கிறார். சிவபெருமானிடம் பயத்தினால் அவரது அடியார்களைக் காமன் நெருங்கமாட்டான்; மகாவிஷ்ணுவிடம் மரியாதையாலேயே அவரது பக்தர்களிடம் தன் கைவரிசையைக் காட்டமாட்டான்.




அத்தியாயம் 9

## யுத்த நிருத்தம்

அன்றிரவு இரண்டாம் ஜாமத்தில், மந்திராலோசனை சபை மறுபடியும் கூடியபோது சபையிலே கூடியிருந்த எல்லோருடைய முகத்திலும் பரபரப்புக் காணப்பட்டது. வாதாபி வீரர்கள் இருவர் வெள்ளைக் கொடி பிடித்துக் கொண்டு தெற்குக் கோட்டை வாசலில் வந்து நின்றதாகவும் அவர்கள் கொண்டுவந்த ஓலை மகேந்திர சக்கரவர்த்தியிடம் சேர்க்கப்பட்டதாகவும் நகரம் முழுவதும் வதந்தி பரவிவிட்டது. ஓலையில் என்ன எழுதியிருந்தது, மகேந்திர பல்லவர் என்ன மறு ஓலை அனுப்பப் போகிறார் என்று அறிந்துகொள்ள அவ்வளவு பேரும் ஆவலாக இருந்தார்கள். முக்கியமாக நரசிம்மவர்மரின் முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடித்தன. அவருடைய கண்களில் பளிச் பளிச்சென்று மின்னல் தோன்றி மறைந்தது. தம் பக்கத்தில் நின்ற பரஞ்சோதியுடன் அடிக்கடி சமிக்ஞா பாஷையினால் அவர் ஏதோ பேசிக் கொண்டிருந்தார். அவருடைய மார்பு புயலால் தாக்குண்ட கடலைப் போல் மேலே பொங்குவதும் கீழே அடங்குவதுமாக இருந்தது. சக்கரவர்த்தி வழக்கத்தை விட மிடுக்கான

நடையுடன் வந்து சிம்மாசனத்தில் அமர்ந்தார். அவர் கையிலிருந்த ஓலைமீது எல்லோருடைய கண்களும் கவனமும் சென்றன.

''சபையோர்களே! இன்று மாலை சபை கலையும் சமயத்தில் முக்கியமான செய்தியை எதிர்பார்ப்ப தாகச் சொன்னேன். நான் எதிர்பார்த்ததைக் காட்டிலும் மிகவும் முக்கியமான ஆச்சரியமான செய்தி வந்திருக்கிறது. மந்திரிகளே! அமைச்சர் களே! தளபதிகளே! அனைவரும் கேளுங்கள். வாதாபிச் சக்கரவர்த்தி யுத்தத்தை நிறுத்திவிட் டார்; சமாதானத்தையும் சிநேகத்தையும்வேண்டி ஓலை அனுப்பி யிருக்கிறார்!'' என்று சொல்லி மகேந்திர பல்லவர் தம் கையிலிருந்த ஓலையைத் தூக்கிக் காட்டியதும் சபையில் ஏற்பட்ட 'ஹாஹா' காரத்தையும் மற்றும் வியப்பொலி களையும் குதூகல சப்தங்களையும் வர் ணிக்க முடியாது. இவ்வளவுக்கிடையில் 'ஹும்' என்ற ஆட்சேபிக்கும் சத்தம் ஒன்றும் கிளம்பியது. அது மாமல்லர் இருந்த இடத்திலிருந்து வந்த தென்ப தைச் சொல்ல வேண்டியதில்லை.

''மந்திரிகளே! அமைச்சர்களே! உங்களுடைய அபிப்பிராயத் தைத் தெரிந்துகொள்ள விரும்பு கிறேன். துங்கபத்ரா நதியி லிருந்து நர்மதை நதி வரை யிலும் உள்ள மத்திய பாரத தேசத்தின் ஏக சக்ராதி பதி நம்முடைய சிநேகத் தைக் கோருகிறார். நம்மு டன் சமாதானத்தை நாடுகிறார். அவருக்கு நான் என்ன மறுமொழி அனுப்பட்டும்? 'யுத்தத்தை நிறுத்த முடியாது. போர் நடத்தியே தீருவோம்' என்று சொல்லி அனுப்பட்டுமா? அல் லது பல்லவ குலத்தின் பரம் பரைத் தர்மத்தை அநுசரித் துச் சிநேகத்தைக் கைக்கொள் ளலாமா? சபையோர்களே! நன்றாக யோசித்துச் சொல் லுங்கள். பதினையாயிரம் யானைப் படையையும் ஐந்து லட்சம் காலாட் படையையும்





உடைய வாதாபிப் புலிகேசி மன்னர், யுத்தத்தை நிறுத்திவிட்டு நமது விருந்ினராகக் காஞ்சி நகருக்குள் பிரவேசிக்க விரும்புகிறார். சில தினங்கள் இங்கே தங்கி இம்மாநகரின் சிறப்புக்களைப் பார்த்துக் களித்து விட்டுப் போக ஆசைப்படுகிறார். அவரை மரியாதையுடன் வரவேற்று உபசரிப்போமா அல்லது கோட்டைக் கதவுகளுக்கு இன்னும் சில தாழ்களைப் போட்டு அடைப்போமா? உங்களுக்குள்ளே கலந்து யோசித்துக்கொண்டு ஏகமனதான அபிப்பிராயத்தை எனக்குத் தெரியப்படுத்துங்கள்'' என்றார் சக்கரவர்த்தி.

பிறகு சற்று நேரம் சபையில் ஒரே கலகலப்பாய் இருந்தது. மந்திரிமார்களும், அமைச்சர்களும் ஒருவரோடொருவர் உற்சாகமாகப் பேசிக் கொண்டார்கள். கடைசியாக, பிரதம மந்திரி சாரங்க தேவ பட்டர் பேசுவதற்கு எழுந்து நின்றபோது, சபையில் நிச்சப்தம் குடிகொண்டிருந்தது.

''பல்லவேந்திரா! தங்களுடைய இராஜதந்திரத்திலும் தீர்க்காலோசனையிலும் இச்சபையோர் அனைவருக்கும் பூரண நம்பிக்கை இருக்கிறது. எந்தக் காரியத்தை எந்தக் காலத்தில் எப்படிச் செய்ய வேண்டுமோ, அப்படித் தாங்கள் செய்து முடிப்பீர்கள் என்று எல்லோரும் உறுதிகொண்டிருக்கிறோம். ஆகவே, முதலில் தங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள விரும்புகிறோம்'' என்றார்.

அப்போது சக்கரவர்த்தி, ''பட்டரே! என் அபிப்பிராயத்



தைக் கேட்கவும் வேண்டுமா? அவசியத்துக்கு மேலே ஒரு விநாடியும் யுத்தத்தை நடத்துவதில் எனக்குப் பிரியமில்லை. ஓர் உயிரேனும் வீணாகச் சேதம் அடைவதில் எனக்கு விருப்பமில்லை. இந்தக் கோட்டைக்குள் இருக்கும் நாம் எல்லோரும் கூடியவரையில் ஒரு குறைவும் இல்லாமல் செளகரியமாயிருக்கிறோம். ஆனால், கோட்டைக்கு வெளியே கிராமங்களிலும் பட்டணங்களிலும் உள்ள பல்லவ நாட்டுப் பிரஜைகள் பெருங் கஷ்டங்களுக்கு ஆளாகியிருக்கிறார்கள். தொண்டை மண்டலத்தில் இந்தக் கோடைக் காலத்தில் பயிர்த் தொழிலே நடக்கவில்லை. இன்னும் சில மாத காலத்தில் பல்லவ நாட்டுப் பிரஜைகளைப் பெரும் பஞ்சம் பீடிக்கக் கூடும். இப்பேர்ப்பட்ட நிலைமையில், அநாவசியமாக யுத்தத்தை வளர்த்துவதற்கு எனக்குச் சம்மதமில்லை. மேலும், உத்தராபத ஹர்ஷ வர்த்தன சக்கரவர்த்தியைப் போர்க்களத்தில் புறங்காட்டச் செய்த வீராதி வீரரான புலிகேசி மன்னர் யுத்தத்தைத் தாமே நிறுத்திவிட்டு வலிய வந்து சமாதானத்தைக் கோரும்போது நாம் அதை எதற்காக நிராகரிக்க வேண்டும்? என்னுடைய அபிப்பிராயம் அவருடைய கோரிக்கையை ஒப்புக்கொண்டு சமாதானத்தை நிலைநாட்ட வேண்டும் என்பதுதான்'' என்றார்.

இவ்விதம் சக்கரவர்த்தி கூறி நிறுத்தியதும், சாரங்கதேவ பட்டர், ''பல்லவேந்திரா! தாங்கள் இப்பொழுது கூறிய விஷயங்கள் எல்லாம் மந்திரி மண்டலத்தைச் சேர்ந்த அனைவருக்கும் உடன்பாடுதான். ஆனால், ஒரே ஒரு விஷயத்தைப் பற்றி எங்களிலே சிலருக்கு ஓர் ஐயப்பாடு இருக்கிறது. வாதாபிச் சக்கரவர்த்தியைக் காஞ்சி நகருக்குள் விருந்தினராக வரவேற்பது பற்றித் தாங்கள் சொன்னீர்கள். அது உசிதமான காரியமா என்றுதான் சந்தேகப்படுகிறோம். வாதாபி மன்னர் பழி பாவங்களுக்கு அஞ்சாத வஞ்சகர் என்றும், அசுர குணம் படைத்தவர் என்றும் கேள்விப்பட்டிருக்கிறோம். காஞ்சியைப் பார்க்க வருவதாக அவர் சொல்வதில் ஏதேனும் அந்தரங்கச் சூழ்ச்சி இருக்கக் கூடுமல்லவா?'' என்றார்.

மகேந்திர பல்லவர் புன்னகையுடன் கூறினார்: ''சாரங்கதேவரே! முன் ஜாக்கிரதை உள்ள மதி மந்திரிகள் சொல்ல வேண்டியதைத்தான் நீங்கள் சொன்னீர்கள். யோசிக்க வேண்டிய காரியம் தான். ஆனால், வாதாபி அரசர் கேட்டிருப்பதில் ஒருவிதமான சூழ்ச்சியும் இருக்க நியாயமில்லை. அவருடைய யானைப் படை, காலாட்படை எல்லாவற்றையும் காஞ்சிக்கு இரண்டு காத தூரத்துக்கப்பால் அனுப்பிவிடச் சம்மதிக்கிறார். அவருடைய மந்திரிப் பிரதானிகள் பத்துப் பதினைந்து பேருடன் நிராயுத பாணியாகக் காஞ்சிக்குள் பிரவேசிக்கச் சித்தமாயிருக்கிறார். சபையோர்களே! நம்மிடம் இவ்வளவு பூரண நம்பிக்கை வைத்துச் செய்தி அனுப்பியுள்ளவரிடம் நாம் எவ்விதத்தில் சந்தேகம் கொள்வது? ஆகவே, யுத்தமா, சமாதானமா என்பதைப் பற்றித்தான் உங்களுடைய அபிப்பிராயம் வேண்டும்!''

மறுபடியும் மந்திரிமார்களும் அமைச்சர்களும் ஒருவரோடொருவர் கலந்து ஆலோசித்தார்கள். கடைசியில், சாரங்க தேவ பட்டர் எழுந்து, ''பல்லவேந்திரா! மந்திரி மண்டலத்தார் சமாதானத்தையே விரும்புகிறார்கள். வாதாபிச் சக்கரவர்த்தியைக் காஞ்சிக்குள் வரவேற்கும் விஷயத்தில் தங்களுடைய கருத்து எதுவோ அதன்படி செய்யலாமென்று அபிப்பிராயப்படுகிறார்கள்'' என்றார்.

### பத்தாம் அத்தியாயம்

## வாக்கு யுத்தம்

மந்திரி மண்டலத்தாரின் ஒருமுகமான அபிப்பிராயத்தை முதன் மந்திரி சாரங்கதேவ பட்டர் கூறி முடித்ததும் மகேந்திர சக்கரவர்த்தி சபையோரை ஒரு தடவை சுற்றி வளைத்துப் பார்த்தார். மாமல்லரும் பரஞ்சோதியும் இருந்த இடத்தை மட்டும் நோக்காமல் அவருடைய கண்ணோட்டத்தை முடித்து

அழகு முகம்
ஒவ்வொன்றுக்குள்ளும்
அழகு ரகசியம்
ஒன்று
ஒளிந்திருக்கிறது.




உங்கள்
நோக்கம்
அழகாகத் தோற்ற
மளிப்பது. உங்கள்
சருமத்தை
அதற்கேற்ப
வைத்திருப்பது
க்ருக்ஸ் லாக்டோ-
காலமைன்.

க்ருக்ஸ்
**லாக்டோ-காலமைன்**

அதுவே எழில் பராமரிப்பு ரகசியம்.

டூஃபார்-இண்டர்ஃப்ரான் லிட்.,
தபால் பெட்டி எண் 6582.
பம்பாய் 400 018



# வாய்நாற்றம் உங்களை விலகி நிற்கச் செய்கிறது...







DC-G 50 TH (8)

## கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.

அதன் வியக்கத்தக்க பெப்பர்மின்ட் சுவையாதனி— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே...
**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும்விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**

விட்டு, ''சபையோர்களே! உங்களுடைய அபிப்பிராயத்தை முன் கூட்டியே எதிர்பார்த்து....'' என்று ஆரம்பித்தார். சிங்காசனத்தில் நிலைத்து உட்கார முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்த மாமல்லர் அப்போது துள்ளி எழுந்து, ''பல்லவேந்திரா! சாதுக்களும், சமாதானப் பிரியர்களும் இராஜதந்திரிகளும், தீர்க்கதரிசிகளும் வீற்றிருக்கும் இந்த மகாசபையில் அடியேனும் ஒரு வார்த்தை சொல்லலாமா?'' என்று கேட்டார். அவருடைய ஒவ்வொரு வார்த்தையும் சீறலுடன் நெருப்பைக் கக்கிக் கொண்டு வரும் அக்னியாஸ்திரத்தைப் போல் அந்தச் சபையில் இருந்தவர்களின் செவியில் பாய்ந்தது.

மாமல்லருடைய அக்னியாஸ்திரங்களை மகேந்திரர் வருணாஸ்திரத்தைப் பிரயோகித்து அடக்க முயன்றார்.

''மாமல்லா! இதென்ன இப்படிக் கேட்கிறாய்? பல்லவ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்துக்கு உரிமை பூண்ட குமார சக்கரவர்த்தியல்லவா நீ! சாம்ராஜ்யத்தின் மந்திராலோசனை சபைகளில் கலந்துகொள்ள உனக்கு இல்லாத பாத்தியதை வேறு யாருக்கு உண்டு? உன் மனத்தில் தோன்றுகிறது என்னவோ, அதைத் தாராளமாகச் சொல்! ஆனால், நான் உன்னுடைய தந்தையாகையாலும், இந்தச் சபையில் உள்ளவர்கள் எல்லாம் வயதிலும் அநுபவத்திலும் முதிர்ந்த பெரியவர்களாதலாலும் எங்களையெல்லாம் அவமதித்துப் பேசும் உரிமையை நீ கோர மாட்டாய் என்று கருதுகிறேன்....''

அப்போது சபையில் ஏற்பட்ட குறுநகைப்பின் ஒலி மாமல்லர் காதில் விழவும் அவர் தம் கண்களில் தீ எழுமாறு சபையைச் சுற்றிப் பார்த்து விட்டுத் தந்தையை இடைமறித்துக் கூறினார்.

''தந்தையே! தங்களையாவது இங்குள்ள பெரியவர்களையாவது அவமதிக்கும் எண்ணம் எனக்குக் கொஞ்சம்கூட இல்லை. பல்லவ குலத்தையும் பல்லவ இராஜ்யத்தையும் உலகம் என்றென்றைக்கும் அவமதிக்காமல் இருக்க வேண்டுமே என்றுதான் கவலைப்படுகிறேன். வாழையடி வாழையாகத் தொண்டைமான் இளந்திரையன் காலத்திலிருந்து வந்த வீர பல்லவ குலத்தின் பெருமையைக் குறித்துத் தாங்கள் அடிக்கடி சொல்லியிருக்கிறீர்கள். பல்லவ குலத்தைச் சேர்ந்தவர்கள் யாராவது இதற்கு முன்னால் இவ்விதமெல்லாம் செய்ததுண்டா? போர்க்களத்தில் எதிரியின் படைகளுக்குப் புறங்காட்டிப் பின் வாங்கி வந்ததுண்டா? பகைவர்களின் படையெடுப்புக்குப் பயந்து, கோட்டைக்குள்ளே ஒளிந்து கொண்டதுண்டா? கடைசியாக இப்போது, பல்லவ நாட்டுக்குள் படையெடுத்து வரத் துணிந்த பாதகனுடன் சமாதானம் செய்துகொள்ளப் போவதாகச் சொல்லுகிறீர்கள். பல்லவேந்திரா! கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். நாளைக்கு உலகிலெல்லாம் என்ன பேச்சு ஏற்படும்? 'வாதாபிச் சக்கரவர்த்தி படையெடுத்து வந்தபோது பல்லவ சக்கரவர்த்தி பயந்து கோட்டைக்குள் புகுந்து கொண்டார்; கடைசியில், சரணாகதி அடைந்து சமாதானம் செய்து கொண்டார்' என்றுதானே உலகத்தார் சொல்லுவார்கள். புலிகேசி சமாதானத்தை வேண்டித் தூது அனுப்பினான் என்று ஒருவரும் சொல்ல மாட்டார்கள். பாண்டியனும் சோழ



னும், சேரனும், களப்பாளனும் பல்லவர்களைப் பார்த்து நகையாடுவார்கள். புள்ளலூரில் புறங்காட்டி ஓடிய கங்க நாட்டான் மறுபடியும் துள்ளி எழுவான். உலகம் உள்ளளவரைக்கும் பல்லவ குலத்துக்கு ஏற்பட்ட இந்தப் பழி மறையாது!''

இப்படி மாமல்லர் கேட்போரின் மான உணர்ச்சியைத் தூண்டும் வீரம் உள்ள வார்த்தைகளைப் பேசிக் கொண்டு வந்தபோது, சபையிலே கலகலப்பு ஏற்பட்டது. மாமல்லருடைய வார்த்தைகளில் உண்மை இருக்கிறது என்பதை ஆமோதித்து ஒருவரோடொருவர் கசுமுசுவென்று பேசிக் கொண்டார்கள்.

இந்த நிலைமையைத் தமது கூரிய கழுகுக் கண்களின் ஓரப் பார்வையி

னால் தெரிந்து கொண்ட மகேந்திர சக்கரவர்த்தி, மாமல்லருடைய பேச்சின் நடுவே குறுக்கிட்டார்.

"மகனே! உலகம் நீ நினைப்பது போல் அவ்வளவு பைத்தியக்கார உலகம் அல்ல. மனிதர்கள் எல்லாரும் அவ்வளவு முட்டாள்களும் அல்ல. அப்படியே இருந்தபோதிலும், அதற்காக நானும் மூடத்தனமான காரியத்தைச் செய்ய முடியாது. அவசியமில்லாத போது யுத்தம் நடத்த முடியாது. இலட்சக்கணக்கான வீரர்களின் உயிரை வீண் வம்புக்காகப் பலி கொடுக்க முடியாது. காரணமில்லாமல் நாட்டின் பிரஜைகளைச் சொல்ல முடியாத கஷ்டங்களுக்கு உள்ளாக்க முடியாது. மாமல்லா! இந்தப் பல்லவ சிம்மாசனத்தில் நான் ஏறியபொழுது, இந்த மணி மகுடம் என் தலையில் சூட்டப்பட்ட அன்று, இச்செங்கோலை முதன் முதலாக என்னுடைய கரத்தில் ஏந்திய உடனே, 'இந்த நாட்டு மக்களின் உயிரையும் உடைமையையும் பாதுகாப்பேன்; அவர்களுக்குக் கஷ்டம் எதுவும் வராமல் தடுப்பேன்' என்று நாடறியச் சபதம் செய்தேன். வெறும் வீம்புக்காகவோ, உலகத்தில் மூடர்கள் ஏதேனும் சொல்லுவார்களே என்பதற்காகவோ அந்தச் சபதத்தை நான் கைவிட முடியாது!" என்று கம்பீரமான குரலில் தலைநிமிர்ந்து கூறினார்.

ஆனால், மாமல்லருடைய அம்பறாத்தூணியில் இன்னும் சில பாணங்கள் மிச்சம் இருந்தன.

"தந்தையே! இந்தப் பல்லவ நாட்டுப் பிரஜைகளைப் பற்றித்தான் தாங்கள் கவலைப்படுகிறீர்கள் என்றால், அந்தக் கவலை தங்களுக்கு வேண்டாம். தெய்வாதீனமான காரணத்தினால் ஏழு மாதங்களுக்கு முன்னால் ஒரு சிறு கிராமத்தில் நான் மூன்று தினங்கள் வசிக்க நேர்ந்தது. அப்போது அந்தக் கிராமத்து ஜனங்கள் பேசிக் கொண்டதை என் இரு செவிகளாலும் கேட்டேன். இந்தப் பல்லவ இராஜ்யத்தின் பிரஜைகள் சுத்த வீரர்கள் என்றும், மானத்துக்காக உயிரையும் உடைமைகளையும் திருணமாக மதிக்கிறவர்கள் என்றும் அறிந்தேன். புள்ளலூர்ச் சண்டையைப் பற்றியும், அதில் நாம் அடைந்த வெற்றியைக் குறித்தும், பல்லவ நாட்டு மக்கள் எப்பேர்ப்பட்ட குதூகலம் அடைந்தார்கள், தெரியுமா? நாம் நம் வீர சைனியத்துடன் இந்தக் காஞ்சிக் கோட்டைக்குள் ஒளிந்து கொள்ளப் போகிறோம் என்ற வதந்தியை அவர்களால் நம்பவே முடியவில்லை. பல்லவேந்திரா! என் காதினால் கேட்ட வார்த்தையைச் சொல்லுகிறேன்; மண்டபப்பட்டுக் கிராமத்து ஜனங்கள் என்ன பேசிக் கொண்டார்கள் தெரியுமா? 'மாமல்லனைப் போன்ற புத்திரனையும், பரஞ்சோதியைப் போன்ற தளபதியையும் படைத்த மகேந்திர சக்கரவர்த்தி புலிகேசிக்குப் பயந்து எதற்காகக் கோட்டைக்குள் ஒளிந்து கொள்ளப் போகிறார்? ஒரு நாளும் அப்படிச் செய்யமாட்டார்!' என்று பேசிக் கொண்டார்கள். புலிகேசி காஞ்சிக் கோட்டைக்கருகில் வந்ததும் பல்லவ சைனியம் வாதாபிச் சைனியத்துடன் வீரப் போர் புரியும் என்று நம் பிரஜைகள் எதிர்பார்த்தார்கள். அவர்களை நாம் அடியோடு ஏமாறும்படி செய்து விட்டோம். இப்போதாவது அவர்களுடைய நம்பிக்கையை மெய்ப்படுத்த எனக்குக் கட்டளையிடுங்கள். இந்தக் கோட்டைக்குள்ளே ஓர் இலட்சம் பல்லவ வீரர்கள் எப்போது போர் வரும் என்று துடி துடித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த நகரின் மாபெரும் கொல்லர்கள் ஒன்றரை வருஷமாகச் செய்து குவித்திருக்கும் வாள்களும் வேல்களும் 'தாகம், தாகம்' என்று தவித்துக் கொண்டிருக்கின்றன. இதோ என் உயிர்த் தோழர் பரஞ்சோதியும் துடிதுடித்துக் கொண்டிருக்கிறார். தந்தையே! சைனியத்தை நடத்திக் கொண்டு போகக் கட்டளையிடுங்கள். வாதாபி சைனியத்தை நிர்மூலம் செய்ய இந்த க்ஷணமே ஆக்ஞை இடுங்கள்!"

மகேந்திர பல்லவர் உணர்ச்சி மிகுதியினால் பேச முடியாமலே தத்தளித்தார். தமது அருமைக் குமாரனுடைய வீராவேச மொழிகளைக் கேட்டு அவருடைய கல் நெஞ்சமும் கனிந்து விட்டதாக ஒரு கணம் தோன்றியது. எனினும், மறு கணமே பல்லைக் கடித்துக்கொண்டு முகத்தையும் கடுமையாக வைத்துக் கொண்டு சொன்னார்: "குழந்தாய்! சுத்த வீரன் சொல்லக்கூடிய வார்த்தைகளை நீ பேசினாய்; அதைக் குறித்து எனக்குச் சந்தோஷம்தான். ஆனாலும், உன் யோசனையை நான் ஒப்புக்கொள்வதற்கில்லை. பல்லவ நாட்டு வீரக் குடிமக்களின் அபிப்பிராயத்தைப் பற்றிச் சொன்னாய். அதைப் பற்றியும் எனக்கு மகிழ்ச்சியே. ஆனால் பிரஜைகளின் அபிப்பிராயம் எப்போதும் சரியான அபிப்பிராயமாயிராது. முன் யோசனையின்றி உணர்ச்சி வேகத்தினால் பிரஜைகள் சொல்லும் பேச்சைக் கேட்டு அது காரணமாக இந்த நாட்டு மக்களுக்கும் அவர்களுடைய வருங்காலச் சந்ததிகளுக்கும் எல்லையற்ற கஷ்ட



"ட்ரூ-டோன்" சமமாகவும் சீராகவும் பரவும்"
திருமதி வின்னி சங்
பரூ ஜெவன், கல்கத்தா.

"ட்ரூ-டோன்" பாதுகாப்பானது, எளிதாக உபயோகிக்கலாம்"
ஜென்னி லீ
லில்ஹா-பெட் ப்யூட்டி சலூன், ஓபராய் இண்டர்காண்டினென்டல், புது தில்லி.

"ட்ரூ-டோன்" வழங்கும் பளபளப்பான இயற்கை வண்ணம் பார்க்க பிரமிப்பூட்டுவது"
சிகரெட் ஹேர் டிரெஸ்ஸிங் அண்ட் ப்யூட்டி பார்லர் சென்னை

"ட்ரூ-டோன்" உங்கள் கேசத்திற்கு அதன் இயற்கையான வண்ணத்தை வழங்குகிறது"
மாண்டி
லில்ஹா-பெட் ப்யூட்டி சலூன், ஓபராய் ஷெரட்டன், பம்பாய்-1.




பெரிய மற்றும் நடுத்தரமான பாக்குகளில் கிடைக்கிறது

ARMS-HC-036-140 TAM

முன்னணியில் நிற்கும் கேச அலங்கரிப்பாளர்கள் ஒருமித்து சிபாரிசு செய்வது

# ஹெலென் கர்ட்டிஸ்
# ட்ரூ-டோன்
# ஹேர் டை

**ஹெலென் கர்ட்டிஸ்** ஆண்களுக்கும் பெண்களுக்குமென,
உலகிலேயே மிகப் பெருமளவு விற்பனையாகும் கூந்தல் சாயம்.

ட்ரூ-டோன் கறை நீக்கியும் கிடைக்கிறது.

தயாரித்து வழங்குவோர்: ஜே.கே. ஹெலென் கர்ட்டிஸ் லிட்., பம்பாய்-1

தென்னிந்தியாவுக்குப் பூரண விநியோகஸ்தர்கள்:

**மெஸர்ஸ் பாரி & கோ., லிமிடெட்**

# உடுத்திவிட்டாலோ உல்லாசப்பெருமிதம்

ஸெமி ஃபுல் வாயில்
புடவைகள்

# ப்ரீதி

கண்கவர் வண்ணங்களில்
உங்கள் மனதுக்குகந்த
டிசைன்களில் கிடைக்கிறது.
100% சுத்தமான எகிப்து பஞ்சு
கொண்டு நெய்யப்பட்டவை.



தி
லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயம்புத்தூர்

உயர்ந்த துணிகளின்
உன்னத சின்னம்

VSK.LMC-PRI.659.TM.

நஷ்டங்களை நான் உண்டாக்கப் போவ தில்லை!''

இவ்விதம் மாமல்லரைப் பார்த்துச் சொன்னவர், சபையோரின் பக்கம் திரும்பி, ''சபையோர்களே! உங்களுடைய சம்மதத்தை எதிர்பார்த்து நான் வாதாபிச் சக்கரவர்த்திக்கு முன்னமேயே மறுமொழி அனுப்பிவிட்டேன். அவருடைய சமாதானத் தூதை ஏற்றுக் கொள்வதாகவும், அவரைக் காஞ்சிமா நகருக்குள் நமது விருந்தினராக வரவேற்க மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொள்வதாகவும் ஓலை அனுப்பி விட்டேன். அவ்விதம் நான் கொடுத்துவிட்ட வாக்கை இனி என்னால் மீறமுடியாது!'' என்றார்.

மாமல்லர் அப்போது முன்னைவிட அதிகப் பரபரப்புடனே, ''அப்பா! இது என்ன? பல்லவ வம்சத்தின் கொடிய சத்துருவை நமது தலைநகரத்தில் வரவேற்பதா? புலிகேசிக்கு உபசாரமா? யுத்தத்தை நிறுத்திச் சமாதானம் செய்து கொள்வதோடாவது நிறுத்திக் கொள்ளுங்கள். வாதாபிப் படை இந்த நாட்டை விட்டு ஒழியும் வரையில் நாம் கோட்டைக்குள்ளேயே வேணுமானாலும் ஒளிந்து கொண்டிருப்போம். ஆனால், வஞ்சகப் புலிகேசியுடன் நமக்குச் சிநேகம் வேண்டாம். வைஜயந்திப் பட்டணத்துக்கு நெருப்பு வைத்த பெரும் பாதகன் இந்தப் புண்ணிய நகரத்துக்குள்ளே காலடி வைக்க வேண்டாம்'' என்று அலறினார்.

''முடியாது மாமல்லா! பல்லவ குலத்தினர் ஒரு தடவை கொடுத்த வாக்கை மீறுவது வழக்கமில்லை. புலிகேசியை நான் வரவேற்றேயாக வேண்டும்'' என்றார் மகேந்திரர்.

இதைக் கேட்ட மாமல்லர் இரண்டு அடி முன்னால் பாய்ந்து வந்தபோது சபையோர் ஒரு கணம் திடுக்கிட்டுப் போய்விட்டார்கள். தந்தையைத் தாக்குவதற்கே அவர் பாய்கிறாரோ என்றுகூடச் சிலர் பயந்து போனார்கள். அவ்விதமான விபரீதம் ஒன்றும் நேரவில்லை. சக்கரவர்த்தியின் அருகில் வந்து கைகூப்பிக் கொண்டு, ''தந்தையே! வாதாபிச் சக்கரவர்த்தியைத் தாங்கள் வரவேற்றேயாக வேண்டுமானால், எனக்கு ஒரு வரம் கொடுங்கள். புலிகேசியும் நானும் ஏக காலத்தில் இந்த நகருக்குள்ளே இருக்க முடியாது. புலிகேசி உள்ளே வரும்போது நான் வெளியே போய்விடுவதற்கு அனுமதி கொடுங்கள்!'' என்றார் மாமல்லர்.

''நானும் அப்படித்தான் யோசித்து வைத்திருக்கிறேன். குமாரா! வாதாபிச் சக்கரவர்த்தி வரும்போது உன்னை வெளியே அனுப்பி விடுவதாகத்தான் உத்தேசித்திருக்கிறேன். அதற்கு வேறோர் அவசியமும் ஏற்பட்டிருக்கிறது'' என்றார் சக்கரவர்த்தி.

இச்சமயத்தில் தளபதி பரஞ்சோதியும் ஓர் அடி முன்னால் வந்து, ''பிரபு! எனக்கும் குமார சக்கரவர்த்தியுடன் வெளியேற அநுமதி தரவேண்டும்!'' என்று கேட்க, மகேந்திரர் கூறினார்:

''ஆஹா! அப்படியே! இராமன் போகும் இடத்துக்கு லக்ஷ்மணனும் தொடர்ந்து போக வேண்டியது நியாயந்தானே! நீங்கள் இருவரும் நம் சைனியத்திலே சிறந்த முப்பதினாயிரம் வீரர்களைப் பொறுக்கிக் கொண்டு ஆயத்தமாகுங்கள். வடநாட்டுச் சளுக்க சைனியம் படையெடுத்த சமயம் பார்த்துக் கோழைத்தனமாகவும் திருட்டுத்தனமாகவும் பல்லவ இராஜ்யத்துக்குள் பிரவேசித்த தென் பாண்டிய நாட்டானுக்கு அவசியம் ஒரு பாடம் கற்பிக்க வேண்டும். சீக்கிரமாகவே புறப்பட ஆயத்தமாகுங்கள்!''



சக்கரவர்த்தியின் கடைசி மொழிகள் மாமல்லருடைய கோபத்தைத் தணித்து ஓரளவு உற்சாகத்தை அளித்ததோடு, மந்திரி மண்டலத்தாரை ஒரே ஆச்சரியக் கடலில் ஆழ்த்தின. (தொடரும்)



# கடவுளின் குழந்தைகள்



படங்கள் : பாலமந்திரில் பாதுகாப்பும் பேறும் கடவுளின் குழந்தைகளும் அவர்களின் அன்புடன் பார்வையிட வரும் பாரதப் பிரதமரும்.

சென்னை, பழைய மாம்பலம் ராமர் கோயில் வாசலில் ஒரு குழந்தை பசியால் அழுது கொண்டிருந்தது. தாயைக் காணோம்! கடைசியில் ஒருவர் அந்த அலறலைப் பொறுக்க முடியாமல் போலீஸ் ஸ்டேஷனுக்குத் தகவல் கொடுத்தார். கான்ஸ்டேபிள் ஒருவர் தாமத மின்றி வந்து குழந்தையைத் தியாகராயநகர் கோபதி நாராயணசாமி செட்டித் தெருவில் உள்ள பாலமந்திருக்கு அழைத்துப் போனார்.

குழந்தைக்குப் பசியாற பாலுணவு கிடைத்தது. அதோடு அனாதையாக விடப்பட்ட அந்தக் குழந்தைக்கு அன்பும்ஆதரவும் கிடைத்தது. அது இங்குள்ள வேறு முந்நூற்று எழுபது குழந்தைகளுடன் சேர்ந்திருந்து வளர்கிறது. இக்குழந்தைகளை யெல்லாம் கடவுளின் குழந்தைகளாகக் கருதிக் கருத்துடன் கவனித்துக் கொள்கிறார் ஸ்ரீமதி மஞ்சுபாஷிணி. பாலமந்திர் என்ற பெயரே அதைக் கூறுகிறது. ஆனால்' இந்தக் குழந்தைகளுக்கோ மஞ்சுபாஷிணிதான் அம்மா, அப்பா, கண்கண்ட தெய்வம் எல்லாம்.

அறியாமையால் கர்ப்பம் தரித்துவிடும் சில பெண்கள் அதைவிட அசட்டுத்தனமான காரியத்தை அறியாமலேயே செய்கிறார்கள். கருவைக் கலைத்துக் கொள்ள முற்படுகிறார்கள். இது தாயின் உயிருக்கே ஆபத்து என்பது ஒருபுறமிருக்க, முயற்சி வெற்றி பெறுதபோது குழந்தையை வெகுவாகப் பாதித்து விடுகிறது. பிறக்கும் குழந்தை ஏதேனும் ஒருவிதத்தில் ஊனமடைந்து காணப்படுகிறது. ஒரு குழந்தைக்குப் பார்வையில்லை; மற்றொன்றுக்குக் கால்கள் திரும்பிக் கொண்டிருக்கின்றன; வேறொன்று அறிவு வளர்ச்சியில் பின்தங்கி விடுகிறது. இப்படி எத்தனையோ. இத்தகைய குழந்தைகளுக்கு அல்லவா தாயின் கண்காணிப்பும் கவனிப்பும் மிக அதிகமாகத் தேவைப்படும்! அனாதரவாகக் கோயில் வாசலிலும், ஆற்றங்கரையிலும், கடற்கரையிலும் விட்டுவிடுவது எவ்வளவு கொடுமை!

இத்தகைய குழந்தைகள் பாலமந்திரில் விசேஷ கவனத்துக்கு உள்ளாகின்றன. தேர்ந்த டாக்டரின் உழைப்பு தானத்தை ஏற்கும் போஷாக்குக் குறைந்த குழந்தைகள் நாளாவட்டத்தில் ஆரோக்கிய நிலை அடைகின்றன. மருத்துவமனை நல்ல வசதிகளுடன் இருக்கிறது. தீவிரமான சிகிச்சை தேவைப்பட்டால் 'அரசாங்கக் குழந்தைகள் மருத்துவ மனை'க்குக் கொண்டு போய்ப் பார்த்துக் கொண்டு வருகிறார்கள்.

மூன்று வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளை ஏற்று வளர்க்கக் கூடிய அனாதை ஆசிரமங்கள் நாட்டில் பல உள்ளன. ஆயின், மூன்று வயதுக்குட்பட்ட ஏன், பிறந்து மூன்று நாட்கள் கூட ஆகாத குழந்தைகளுக்குப் பொறுப்பேற்கக் கூடியவை மிகச் சொற்பம். காரணம் இதில் சிரமம் அதிகம். அதிலும் வரும் போதே நோய் நொடியுடன் அல்லது போஷாக்கின்றி இளைத்துத் துரும்பாகி இன்றோ நாளையோ என்ற நிலையில் இருக்கிற குழந்தைகளைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொள்ள வேண்டும். இதனை ஒரு புனிதப் பணியாக மதித்தால்தான் சாத்தியமாகும். பாலமந்திர் அத்தகைய புனிதவதிகளைக் கொண்டிருப்பதை நேரில் சென்றிருந்த போது பார்த்து அறிந்தேன்.

அப்போது ஸ்ரீமதி மஞ்சுபாஷிணி பாலமந்திர் ஆரம்பமாவதற்குக் காரணமாயிருந்த ஒரு நிகழ்ச்சியை விவரித்தார்:

''தில்லியில் ஸ்ரீ ராமகிருஷ்ண டால்மியாவிடம் ஒரு சமயம் பேசிக் கொண்டிருந்த போது அனாதைக் குழந்தைகளைக் கிறிஸ்துவ குருமார்கள் எடுத்து வளர்த்து ஆளாக்குவது



போல் அவ்வளவு ஆர்வமும் சிரத்தையுமாக நம்மவர் பாடுபடுவதில்லை என்று குறிப்பிட்டேன், வாய் வார்த்தையாக.

''உடனே அவர், 'ஏன் நீதான் அப்படி ஒரு ஸ்தாபனத்தை ஆரம்பியேன். எவ்வளவு பணம் அதற்குத் தேவைப்படும்?' என்றார்.

''எனக்குத் திகைப்பாகி விட்டது. பதில் கூறத் தெரியவில்லை. ஸ்ரீ ராம்நாத் கோயங்காவும் அப்போது அருகில் இருந்தார். 'இப்போதைக்குப் பத்தாயிரம் ரூபாய் என்று கூறி வை; பிறகு பார்த்துக் கொள்ளலாம்' என்றார் அவர். அப்படியே சொன்னேன்.

''மறு நாளே என் கையில் பத்தாயிரம் ரூபாய்க்குச் செக் வந்து சேர்ந்து விட்டது. எனக்கு ஒரு நிறுவனத்தை ஆரம்பிப்பது தவிர வேறு வழியில்லை!

''ஆச்சரியமென்னவென்றால் பாலமந்திருக்கு என்று ஒரு குடிசை கூட இல்லாத போதே இரு அநாதைக் குழந்தைகள் என்னிடம் வந்து சேர்ந்தன. சரி, கடவுள் சித்தம் இது என்று தீர்மானித்துப் பணியைத் தொடங்கினேன்.''



ஸ்ரீமதி மஞ்சுபாஷிணி அந்த ஆரம்ப காலச் சிரமங்களைச் சாங்கோபாங்கமாக விவரித்ததுடன் ஸ்ரீ காமராஜ் அளித்த உதவிகளையும் ஊக்கத்தையும் குறிப்பிட்டார். தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் இயங்கிய பாலமந்திர், பல இடங்கள் மாறிக் கடைசியில் தற்போதுள்ள இடத்துக்கு 1950ல் சென்னை அரசு நிலம் ஒதுக்கிய போது வந்து சேர்ந்தது. ''கட்டிடம் எழுப்பப் பணம் வேண்டும் என்று யோசித்துக் கொண்டிராதே. வேலையை ஆரம்பி, உதவி தன்னால் வரும்'' என்றார் காமராஜ். அப்படியே மஞ்சுபாஷிணி துணிந்து செயல்பட்டார். பல்வேறு நிறுவனங்கள் கட்டடத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் பொறுப்பேற்றுக் கொண்டன. தனிமனிதர்களின் தாராள நன்கொடைகளும் கிடைத்தன.

அந்த ஆரம்பகாலச் சிரமங்களெல்லாம் ஏதோ கனவுபோலிருக்கும் மஞ்சுபாஷிணிக்கு. என்றாலும் இப்போதும்—ஆஸ்பத்திரி, நர்ஸரி, ஆரம்பப் பாடசாலை, நீரா சத்தியமூர்த்தி பெயரால் உயர்தரப் பாடசாலை, தச்சுவேலைப் பகுதி, லாண்டரி பகுதி என்று பலவாறாகப் பால மந்திர் வளர்ந்துவிட்ட பிறகும்கூட — பிரச்னைகளுக்குக் குறைவில்லை. ஆசிரமத்தின் வளர்ச்சியுடன் பிரச்னைகளும் வளர்கின்றன! '' 'நாளை சமைக்க அரிசி இல்லை' என்று உக்கிராண நிர்வாகி வந்து கூறும்போது இரவெல்லாம் தூக்கம் வராது. ஆனால் மறுநாள் காலை ஒரு டாக்டர் அல்லது ஒரு வர்த்தகர் ஆயிரம் ரூபாய்க்குச் செக்குடன் வந்து நிற்பார்! கடவுளே அனுப்பி வைத்தது போல் அல்லது கடவுளே வேறு ரூபத்தில் வந்து நிற்பது போல் எனக்குத் தோன்றும்'' என்றார் மஞ்சுபாஷிணி. பாலமந்திருக்கு உலக முழுவதிலிருந்தும் பலவித உதவிகள் கிடைக்கின்றன. இருந்தும் போதவில்லை.

பால மந்திர் சிறுவர் சிறுமியருக்குக் கல்வி போதிக்கிறது; படிப்பில் நாட்டம் இல்லாதவர்களுக்குத் தொழில் கற்பிக்கிறது; பிழைப்புக்கு வழி சொல்வது மட்டுமில்லை. படித்துத் தேறியவர்களுக்கு வேலை கிடைக்க வேண்டும் என்பதிலும் சிரத்தை கொள்கிறது. பெண்களானால் மாப்பிள்ளை தேடிக் கல்யாணம் செய்து வைக்க முயற்சிக்கிறது!

பால மந்திரின் வளர்ச்சிக்குத் திட்டங்கள் பலப் பல உள்ளன. இவற்றில் சிலவேனும் உடனடியாக நிறைவேறியாக வேண்டும். இதற்கு மக்களின் ஒத்துழைப்பைக் கோரிப் பெறவும் பால மந்திரின் நற்பணிகளைச் சமூகம் நன்கு அறியச் செய்யவும் வெள்ளிவிழா வைபவம் ஒரு வாய்ப்பு. பிரதமர் இந்திராகாந்திக்கு பாலமந்திர் செய்து வரும் அரிய சேவை நன்கு தெரியும். உன்னதமான இந்தப் பணி வெள்ளி விழா காண்பதை வாழ்த்த உன்னதமான பதவியில் உள்ள அவரே வருகிறார். செப்டம்பர் ஏழாம் தேதி காலை பாலமந்திருக்கு விஜயம் செய்து வெள்ளி விழாக் கொண்டாட்டத்தை ஆரம்பித்து வைக்கிறார். நல்ல காரியங்களுக்கு உதவுவதற்கென்றே காத்துக் கொண்டிருக்கும் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி, வெள்ளி விழாக் கொண்டாட்டத்தின் இறுதி நிகழ்ச்சியாக உதவிக் கச்சேரி அளிக்கிறார், அக்டோபர் ஐந்தாம் தேதி.

கடவுளின் குழந்தைகளைக் கடவுள் பார்த்துக் கொள்வார் என்று நாம் சும்மா இருந்துவிடலாமா? கடவுளின் குழந்தைகள், அவர் நம் பொறுப்பில் விட்டு வைத்திருக்கும் மதலைகள் என்ற உணர்வைப் பெறுவோம்.

— கி. ராஜேந்திரன்



# பேபி ஃபுட் பற்ருக்குறையிருந்தால் பாலமுல் உங்களுக்கு உதவ முடியும்

**பாட்டிலில் கொடுத்தல்**

குழந்தைக்கு மூன்று மாதம் ஆனதும், உணவு தயாரிக்கும் போது, பேபி ஃபுட்




**ஸ்பூனுல் ஊட்டுதல்**

சிறிது பால் அல்லது நீருடன் பாலமுல் கலந்து பசைபோல் ஆக்குங்கள். சுவைக்கு வேண்டிச் சர்க்கரை சேருங்கள். காலேயில் பாட்டிலில் கொடுப்பதற்குமுன்



ஒரு ஸ்பூனும், எளிதில் ஜீரணமாகும் பாலமுல் ஒரு ஸ்பூனுமாகக் கலந்து கொடுக்கத் தொடங்குங்கள். பிறகு படிப்படி யாக அதிகமாக்கி,பேபி ஃபுட் பாதியும், பாலமுல் பாதியுமாகக் கொடுங்கள்.




இதை ஸ்பூனுல் ஊட்டுங்கள். படிப்படியாய், ஒரு நாளேக்கு 2, 3 தடவைகளாக பாலமுலே, பழச்சாறு, பருப்பு, முட்டை, இவைகளோடு கொடுத்து, சுவைத்து இன்புறச் செய்யுங்கள்.

*100 கிராம். அமுல்ஸ்ப்ரே, பாலமுல் இரண்டையும் உணவுச் சத்தில் ஒப்பிட்டுப் பாருங்கள்.*

| | அமுல்ஸ்ப்ரே | பாலமுல் |
|---|---|---|
| புரதம் | 22.0 கிராம் | 22.0 கிராம் |
| கார்போஹைட்ரேட்ஸ் | 50.0 கிராம் | 60.0 கிராம் |
| கொழுப்பு | 18.0 கிராம் | 7.0 கிராம் |
| கால்ஷியம் | 1.0 கிராம் | 1.0 கிராம் |
| ஃபாஸ்ஃபரஸ் | 0.8 கிராம் | 0.8 கிராம் |
| இரும்புச் சத்து | 4.0 மி.கிராம் | 6.0 மி.கிராம் |
| வைடமின் A | 1500 இ.யு. | 1500 இ.யு. |
| வைடமின் D | 400 இ.யு. | 300 இ.யு. |
| வைடமின் $B_1$ | 0.6 மி.கிராம் | 0.5 மி.கிராம் |
| வைடமின் $B_2$ | 1.0 மி.கிராம் | 0.6 மி.கிராம் |
| வைடமின் $B_6$ | 0.3 மி.கிராம் | — |
| நியாஸினமைட் | 6.0 மி.கிராம் | 5.0 மி.கிராம் |
| வைடமின் C | 30.0 மி.கிராம் | 50.0 மி.கிராம் |

# பாலமுல்

**பாலுடன் கூடிய தானிய உணவு**
**ஏறக்குறைய அமுல்ஸ்ப்ரே**



கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோவாபரேடிவ் மில்க் ப்ரொட்யூஸர்ஸ் யூனியன் லிமிடெட், ஆனந்த்.

# அவசியங்களும் அனாவசியங்களும்!

**ம**துரை சோமு புதிதாக வீடு கட்டிக் கொண்டிருக்கிறார், சென்னை, நுங்கம்பாக்கத்தில். அதனால்தானோ என்னவோ நுங்கம் பாக்கம் கல்சரல் அகாடமி கச்சேரியில் அவருக்கு உற்சாகம் கரை புரண்டது !

இதோ மகாராஜபுரம் வருகிறார் என்று கூறி மோகனத்தை வெளுத்து வாங்கினார். பட்டணமாம் அலிகான் என்று சொல்லி, தர்பாரி கானடாவை ஒரு கை பார்த்தார். 'மிமிக்ரி' தவிர சில சமயம் பாட்டைப் பேசினார். பதம் பிரித்து உரைத்தார், உபாத்தியாயர் மாணவர்களுக்குச் செய்யுள் பாடம் எடுப்பது போல ! நாதகவர சங்கதி என்பதாகத் தெரியாமல் போய்விடப் போகிறதே என்ற கவலையில் விரல்களை அசைத்துக் காட்டினார். தம் பிடித்து ஊதக்கூடச் செய்தார் !

அவருக்கு இருந்த உற்சாகத்தில் வயலின் சந்திரசேகர் பாடு திண்டாட்டமாகிவிட்டது. 'சந்துரு ! கொடுத்து வாங்கு!' என்று ஊக்கினார் ஒரு சமயம். 'அப்படி அப்படி விபிட்டா' என்று குழைந்தார் இன்னொரு சமயம். 'சந்துரு நம்மை முந்திக்குதே' என்று வியந்தார். வயலினில் அவர் 'போ' போட வேண்டியதுதான், உடனே ஒரு பாட்டை இலேசாக எடுத்துவிடுவார் சோமு. ஒரு தருணத்தில் 'மனமே நீ ஈசன் நாமத்தை' என்று ஆரம்பித்து எம்.கே.டி. பாகவதருக்கு அஞ்சலி செலுத்தினார் !

இதற்கெல்லாம் ஈடு கொடுத்து, பொறுமையாக, எவ்வளவோ சிரத்தையுடன் அமைதியாக, சம்பிரதாய சுத்தமாக வாசித்து வந்த சந்திரசேகர்கூட ஆனந்த பைரவியில் கும்மி, கோலாட்டம், டப்பாங்குத்து என்று இறங்கி விட்டாரென்றால் அன்று சோமு எத்தனை அமர்க்களப்படுத்தி யிருப்பார், பார்த்துக் கொள்ளுங்கள் ! ஆயின் சந்திரசேகர் சீக்கிரமே இதிலிருந்து மீண்டு வந்து தர்பாரி கானடாவில் தர்பாரே நடத்தினார் ! ராஜ கம்பீரமே இழைந்தது அந்த வாசிப்பில்.

சோமு அவர்களின் கச்சேரியில் அநாவசியங்கள் ரொம்ப அதிகம் என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதான். ஆனால் அவரது ரசிகர்கள் அதை விரும்புவதால்தான் அப்படி அவர் நடந்து கொள்கிறார் என்பதாகவும் எண்ணத் தோன்றுகிறது. வரவேற்பு இல்லாத போனால் அனாவசியம் எட்டிக்கூடப் பார்க்காது அல்லவா ?

இப்போதெல்லாம் 'பாப்' இசை எங்கு நோக்கினும் 'பாப் அப்' ஆகிக் கொண்டிருக்கிறது. கையிலே மைக்கைப் பிடித்துக் கொண்டு பாடியபடியே ஆடுகிறார்கள், உருண்டு புரளக்கூடச் செய்கிறார்கள். போதாக் குறைக்கு ரசிகர்களையும் மேடைக்குத் தருவித்துக் கூத்தாடச் செய்கிறார்கள். அவ்விதம் மேடையேற்றப்படும் ஆண்களும் பெண்களும் தங்களுக்கு ஏதோ பெரிய கௌரவம் கிடைத்துவிட்டதாக நினைத்து, கைகளை ஆட்டியும் இடுப்பை ஒடித்தும் ஆடுகிறார்கள்.

இதனாலெல்லாம் கர்நாடக சங்கீதத்துக்கு உள்ள ஆதரவு படிப்படியாகக் குறைந்து விடுமோ என்ற அச்சத்தில், பாடகருக்கும் ரசிகருக்கும் இடையில் உள்ள ஒரு நெருக்கத்தை வளர்க்கும் நோக்கில், சோமு அவர்கள் அநாவசியங்களைத் தமது கச்சேரியில் புகுத்திக் கொண்டிருக்கலாம். அல்லது, கச்சேரி என்றால் எல்லாம் 'ஸீரிய'ஸாகத்தான் இருக்க வேண்டுமா, கொஞ்சம் தமாஷாகத்தான் இருக்கட்டுமே என்ற எண்ணமாகவும் இருக்கலாம். இதில் எது உண்மை என்று நமக்குப் புரியாவிட்டாலும் சோமுவின் கச்சேரி அநாவசியங்களுடன் முடிந்துபோகிற விஷயமல்ல என்கிற உண்மை மட்டும் மிகத் தெளிவு. அனாவசியங்களைக் கொஞ்சம்கூட விரும்பாத என் போன்றவர்களையும் மூன்று மணி நேரம் வசீகரித்து உட்கார வைக்கிற சக்தி அவருக்கு இருக்கிறது.



சோமு



சந்திரசேகர்



சந்தானம்

கேட்டுப் பரவசமடையும்படியான இடங்களை அனாவசியப் பிரியர்கள் கோட்டைவிட்டு விட்டாலும் பாதகமில்லை. சோமு, 'ஆண்டவனே' என்று அழைத்து அவருக்குப் பிரீதியாக்கிச் சூள் கொட்டி ரசித்துவிடுவார்! ஆனால் அந்த ரசிப்பு தம்முடைய பாட்டை நினைத்து மட்டுமல்ல என்றும் இப்படியெல்லாம் பக்தி பாவம் மிக்க சாகித்தியங்களை அமைத்துத் தந்த சிரோமணிகளையும் இவ்வாறெல்லாம் அற்புதமான ராகங்களை உருவாக்கித் தந்த மேதைகளையும் எண்ணி அப்படியே மனம் கரைந்து உருகுகிறார் என்றும் தோன்றும். அந்த அளவுக்கு அவர் இசையிலும் சாகித்தியத்திலும் ஒன்றி உணர்ச்சிவசப்படுகிறார். பிறகு அந்தச் சாரீரம்! கருவியுடன் இழைந்து கார்வை கொடுத்து அரை நிமிஷம் ஒரு நிமிஷம் என்று நிற்கிற ஆற்றல்! மேலே மேலே அதற்கும் மேலே போய்ச் சஞ்சாரம் பண்ணுகிற லாகவம்! அவருடைய தன்யாசியும் பைரவியும் அவர் குறிப்பிட்டது போல் சந்திர மண்டலத்துக்கே அன்று நம்மை அழைத்துப் போகா விட்டாலும் மேக மண்டலங்களினூடே மிதக்கும் அனுபவத்தை நமக்கு ஏற்படுத்தத்தான் செய்தது.

* * *

சோமுவின் கச்சேரியில் அனாவசியங்கள் நிரம்ப இருந்தன என்றால் சந்தானம் கச்சேரியில் அவசியங்களே இல்லாதது குறை. ஒரு கனமான ராகத்தை எடுத்து விஸ்தாரமாக ஆலாபனை செய்து பிறகு அந்த ராக பாவங்களை நன்கு வெளிப்படுத்த வசதியான ஓர் அழுத்தமான கீர்த்தனையை விச்ராந்தியாகப் பாடி மகிழ்விக்க வேண்டாமோ? கானடா, கல்யாண வசந்தம், சுத்ததன்யாசி என்ற ரீதியில் அமைந்திருந்தது சந்தானத்தின் கச்சேரி, கிருஷ்ணகான சபையில். விறுவிறுப்பு கூடலாம், ஆனால் மன நிறைவு...?


அருணா

பாடியவரை மிக நன்றாகப் பாடினார். அன்று மத்தியானத்திலிருந்து எனக்கு முணுக் முணுக்கென்றிருந்த தலைவலி அவர் சுத்த தன்யாசியை எடுத்ததும் இருந்த இடம் தெரியாமல் ஓடிவிட்டது. மகராஜபுரம் விசுவநாத அய்யரின் சந்தான பாக்கியம் சந்தானம் என்றால் அத்துடன் சங்கீத சந்தானத்தையும் சந்தானம் பெற்றிருப்பது சந்தானத்தின் பாக்கியம். பிருக்காக்கள் என்னமாய் விழுகின்றன!

அன்று சிவராமனின் லய மழையைத் தாங்க முடியாமல்தானோ என்னவோ வானம் பொத்துக் கொண்டு நிஜமாகவே கொட்டித் தீர்த்துவிட்டது. மழை நின்ற போது கூடவே மின்சார ஓட்டமும் நின்றுவிட்டதால் ஒன்றும் குடிமுழுகிப் போய்விடவில்லை. மைக் இல்லாத கச்சேரியாக மாறி இனிமையும் சுகமும் அதிகரிக்கவே செய்தன. மேடையிலும், பின்னால் முருகனின் உருவப் படத்தின் முன்னும் தீபங்கள் ஒளிர்ந்து கோயில் சந்நிதானத்தில் கச்சேரி நடப்பது போன்ற பிரமையை உண்டாக்கின.

* * *

பார்த்தசாரதி சுவாமி சபாவில் செம்மங்குடியின் கச்சேரியை அண்மையில் கேட்டவர்கள் பாக்கியசாலிகள். இப்போதெல்லாம் அபூர்வமாகிவிட்ட செம்மங்குடியின் கச்சேரிகளுள் ஒன்று. அபூர்வமாகப் பாடினாலும் அபாரமாகப் பாடிவிடுகிற செம்மங்குடி, 'சேஷாத்திரி பிடிவாதமாக என்னை இங்கே கொண்டு வந்து உட்கார்த்தி வைச்சுட்டான்' என்றார். அது காரியதரிசி சேஷாத்திரியோ அல்லது சாட்சாத் சேஷாத்திரியேதானோ என்று எண்ணும் அளவுக்கு ஈசுவரார்ப்பணம் ஆக வேண்டிய கச்சேரியாக அன்று அமைந்தது. அதுவும் சுத்த தன்யாசியில் 'பார்த்தசாரதி' என்று ஆரம்பித்ததும் கேட்டவர்கள் சிலிர்த்துப் போனார்கள். துணைக்குக் கேதாரநாதனும் வி. சுப்பிரமணியமும் இருப்பதைச் சுட்டிக் காட்டினார் செம்மங்குடி. மூன்று பேர் சேர்ந்து பாடினாலும் கோஷ்டி கானம் போலவா தொனித்தது? ஏழு வர்ணங்கள் இணைந்து ஒரே ஒளியாக முடியுமானால் மூன்று குரல்கள் இழைந்து ஒரே ஒலியாக ஏன் வெளிப்பட முடியாது என்று கேட்டு நிரூபிப்பது போலல்லவா இருந்தது!


கிருஷ்ணன்

ஜெயராமனும் செம்மங்குடியும் ஒருவரிடமிருந்து ஒருவர் ஊக்கமும் உற்சாகமும் பெற்றுச் சங்கீத சாகரத்தின் ஆழத்துக்கும் நம்மைக் கொண்டு போய்த் திணற அடித்தார்கள். ஆனந்தமாய் மிதக்கவும் விட்டார்கள். அலைகளில் ஏறி ஊஞ்சலாடவும் வைத்தார்கள்!

* * *

இளம் வித்வான்களுக்குக் கிருஷ்ண கான சபா ஊக்கமளிப்பது போல் வேறு சபாக்கள் செய்வதில்லை. ஞாயிற்றுக் கிழமைகளில் பிற்பகலில் இளம் பாடகர்களுக்கு வாய்ப்பளிக்கிறது இந்த சபா. எல்லாரையும் கேட்கவோ அனைவரையும் பற்றி எழுதவோ முடியாது என்றாலும் ஏதோ ஒருவரையாவது வாசகர்களுக்கு அறிமுகப்படுத்திய புண்ணியத்தைக் கட்டிக் கொள்ளலாம்தானே! அந்த அளவில் ஸ்ரீமதி அருணா சாய்ராமின் கச்சேரி மிகத் தரமாக அமைந்த ஒன்று என்று கூறி மகிழலாம். பிருந்தாவின் சிஷ்யை, பிருந்தா பாணியை அழுத்தமாகப் பாடுவதில் பின்பற்றினாலும் தமக்கென்று ஒரு வழி வகுத்துக் கொண்டுமிருக்கிறார். வி.வி. ரவியும் மாஸ்டர் சுந்தரும் முறையே வயலினிலும் மிருதங்கத்திலும் பக்க வாத்தியமாகவும் பக்க பலமாகவும் இருந்தார்கள், அருணாவுக்கு. அருணோதயம் ஆகியிருக்கிறது. பிரகாசிக்க வேணும்.





# லாட்டரிப் பேய்!

மது அரக்கனையும் குதிரைப் பந்தய அரக்கனையும் ஒழித்துக் கட்டிய முதல்வர் லாட்டரிச் சீட்டுப் பேயை மட்டும் மடியில் கட்டிக் கொண்டிருப்பது மிகப் பெரிய முரண்பாடு.

லாட்டரிச் சீட்டு மூலம் அரசுக்குக் கிடைக்கும் வருவாய் மக்களுக்கு நற்பணிகள் பல செய்யவே பயனாகிறது என்ற முதல்வரின் வாதம் செல்லாது.

நல்ல குறிக்கோள்களை அடைய மேற்கொள்ளப்படும் வழிமுறைகளும் நல்லனவாக அமைய வேண்டும் என்றார் அண்ணல். அண்ணாவும் ஒப்புவார்.

கடைத் தெரு, கோயில், கடற்கரை என்று எங்கே போனாலும் இளம் சிறார்கள் கையில் லாட்டரிச் சீட்டுக்களை வைத்துக்கொண்டு, ''ஸார், ஸார்! தமிழரசுச் சீட்டு ஸார்! ஒன்னு வாங்குங்க ஸார்!'' என்று கெஞ்சுவது கண்ணறுவிக் காட்சி; தி.மு.க. அரசுக்கு இழுக்கு; குழந்தைக் குலத்துக்கு மாபெரும் துரோகம்.

புகைப் படங்கள்: உத்தரா.




அதற்கு உதவுபடியாக, சுருதி சுத்தம், நல்ல சாரீரம், ஆர்வம் எல்லாம் உள்ளன.

அன்றைய தினமே மாலையில் ஜெயராமனுடன் சேர்ந்து அவர் மகன் கிருஷ்ணன் வயலின் வாசித்தான் (ர்?). சிறு வயதிலேயே மேடை ஏறுவது பற்றி அபிப்பிராய பேதம் இருப்பது இயல்பு. தவறு என்று சொல்பவர்களின் வாதத்தில் சில நியாயங்கள் இருப்பினும் எல்லோரையும் ஒரே அளவுகோல் கொண்டு பார்க்க முடியாது. அதிலும் சங்கீத பரம்பரையில் வந்தவர்களானால் இளம் வயதிலேயே அவர்களின் ஆற்றலுக்கு உற்சாகமளித்துச் சோபிக்கச் செய்வது அவசியம். இதில் கவனக் குறைவாக இருந்துவிட்டால் அந்த இளைஞனின் மனம் திசை மாறிப் போக சங்கீத உலகம் ஒரு நல்ல வித்வானை இழக்கும் விடலாம்.

சிறிது காலத்துக்கு முன்பு ஸ்ரீமதி ஸ்ரீமதி பிரும்மானந்தம் ( ஸ்ரீ ஸ்ரீபிரகாசா மாதிரி!) தமது சகோதரர் ஜெயராமனுடன் சேர்ந்து வயலின் வாசிக்கக் கேட்டுப் பரமானந்தம் அடைந்தவர்களுக்கு 'அடடா! இப்போதெல்லாம் ஸ்ரீமதி மேடை ஏறுவதில்லையே!' என்ற ஏக்கம் இருக்கும். அந்தக் குறை கிருஷ்ணன் ரூபத்தில் விரைவில் நீங்கும் என நம்பலாம். அடக்கமோ, வெட்கமோ, கிருஷ்ணன் குனிந்த தலை கடைசி வரை நிமிரவேயில்லை! ஆனால் வாசிப்பில் தலை குனிவுக்கு இடமேயில்லை. கேட்பவர்களுக்கே பெருமையாக இருந்ததென்றால் எதிரே உட்கார்ந்திருந்த கிருஷ்ணனின் தாத்தாவுக்கு எப்படி இருந்திருக்கும்? புளகாங்கிதம் அடைந்திருப்பார், நிச்சயம். கிருஷ்ணனின் முகச் சாயல் அம்மாவை உரித்து வைத்திருக்கிறதென்றால் வாசிப்பில் அப்பாவின் சாயல் அப்படியே இருக்கிறது! எடுத்துக்காட்டு, பல்லவி கவர ராகமாலிகையில் அவன் வாசித்த தயித்தோனம்.

— குட்டி கிருஷ்ணன்

# பொன்னியின்

## 6. விளையாடாப் பிள்ளை!

**ஓடியும் கூடியும் விளையாடலாம்;**
**ஓடாமலும் கூடாமலும் விளையாடலாம்**

"சுத்த விளையாட்டுப் பிள்ளை" என்று பல பையன்கள் பெயரெடுப்பதுண்டு. கிருஷ்ணமூர்த்தியோ "சுத்தமாய் விளையாடாப் பிள்ளை" என்று பெயரெடுத்தான். விளையாட வேண்டிய பருவத்தில் விளையாடா விட்டால் அது சாதாரண நிலை இல்லைதான். சிறு பிள்ளையாய் இருக்கையில் தாம் விளையாடாமல் இருந்து விட்டதைக் கல்கி, அடிக்கடி வருத்தத்துடன் நினைத்துக் கொள்வதுண்டு. கிட்டத்தட்ட நாற்பது வயதாகியிருந்தபோது, அப்படி ஒரு சமயம் நினைத்துக் கொண்டதை அவர் எழுத்திலேயே தெரிவித்தார். அப்போது பாலாற்றின் கரையில் மாசிலாமணி முதலியார் குருகுலம் அமைத்துச் சில ஆண்டுகள் ஆகியிருந்தன. அதைச் சுற்றிப் பார்த்துவிட்டு எழுதிய நீண்டதொரு கட்டுரையின் மத்தியில் அவர் சொல்கிறார்:

எதிரில் மாணாக்கர் கோஷ்டிகள் சில வந்து நின்றன. உடனே கவாத் வேலைகள் ஆரம்பமாயின. கவாத்து என்றால் ஒரு தினுசு அல்ல; பல விதங்கள். முதலில் சாதாரண டிரில்; அப்புறம் தண்டால் பஸ்கி தினுசுகள்; அப்புறம் யோகாசனங்கள்; பிறகு, தாண்டுதல், எழும்பிக் குதித்தல். இன்னும் சிலம்பம், குஸ்தி, கத்தி விளையாட்டு முதலியன.

அப்படியே பிரமித்துப் போய்விட்டோம் நாங்கள். முக்கியமாக, நான் அங்கேயே பகற் கனவு காண ஆரம்பித்துவிட்டேன். மறுபடியும் சிறு பிள்ளையாகி அந்தப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிக்கும் பாக்கியம் கிடைக்காதா என்றே தோன்றிவிட்டது.

நான் பள்ளிக்கூடத்தில் படித்த இலட்சணம் அப்போது ஞாபகம் வந்தது. நான் படித்த நாளில், ஹைஸ்கூல் பிள்ளைகளைச் சாதாரணமாய் இரண்டு பிரிவாகப் பிரித்து விடுவது வழக்கம்; ஒன்று படிக்கிற பிள்ளைகள்; இரண்டு விளையாடுகிற பிள்ளைகள் என்று. படிக்கிற







"எதிரில் மாணாக்கர் கோஷ்டிகள் வந்து நின்றன. கவாத் வேலைகள் ஆரம்பமாயின. முதலில் சாதாரண டிரில், அப்புறம் தண்டால் பஸ்கி தினுசுகள்' அப்புறம் யோகாசனங்கள்...."

தம்பியும் அண்ணனும் சேர்ந்து ஊஞ்சல் ஆடுவார்கள்; ஆடிக் கொண்டே பாடுவார்கள்....

# புதல்வர்

சுந்தா



பிள்ளைகள் விளையாடப் போக மாட்டார்கள். விளையாடுகிற பிள்ளைகளுக்குப் படிப்பு வராது! அவர்கள் உபாத்தியாயருடைய தயவில் ஆறாவது பாரம் வரையில் தூக்கிப் போடப் படுவார்கள். பிறகு, ஆறாவது பாரத்திலேயே வருஷக் கணக்காய் இருப்பார்கள். அவர்கள் வேறு பள்ளிக்கூடங்களுக்குப் போய் விடாவண்ணம், உபாத்தியாயர்களும் அவர்களைத் தாஜா பண்ணி வைத்திருப்பார்கள்.

படிக்கிற பிள்ளைகளுக்கு – நல்ல மார்க்கு வாங்குகிற பிள்ளைகளுக்கு – வேறுவிதச் சலுகை உண்டு. அவர்கள் டிரில் கிளாஸுக்குப் போக வேண்டியதில்லை!

ஆகவே, நான் ஹைஸ்கூலில் படித்த நாளில் செய்த தேகாப்பியாசம் ஒன்றே ஒன்றுதான். சில சமயம், 'புட்பால்' விளையாட்டு நடக்கும் மைதானங்களுக்கு வேடிக்கை பார்க்கப் போவதுண்டு. அப்போது, விளையாடுகிறவர்கள் பந்தை வேகமாய் உதைக்கும்போது, நாங்கள் வேடிக்கை பார்க்கிற உற்சாகத்தில் சில சமயம் காலை வெறுந் தரையில் உதைப்போம்!

(ஆ.வி.கட்டுரை — 16-1-'38)

திருச்சியில் படிக்கையில் இப்படி. அதற்கு முன்னால் மாயூரத்தில் படிக்கையிலும், அதற்கும் முன்னால் கிராமத்தில் இருக்கையிலும் இப்படித்தான்.

பட்டணத்துக் குழந்தைகளை விடக் கிராமத்துக் குழந்தைகள் அதிகமாய் விளையாடுவார்கள் – நேரமும் இடவசதியும் கூடுதலாய் உள்ள காரணத்தால். சாதனம் ஏதும் இல்லாமலே, ஆற்று மணலில் சடுகுடு விளையாடலாம்; ஓடிப் பிடித்து விளையாடலாம். ஓர் ஓட்டுச் சல்லி இருந்தால் போதும், பாண்டி விளையாட. கிட்டிப்புள் விளையாடவோ, கல்லா மண்ணா விளையாடவோ வேண்டிய குச்சிகளை ஒடித்துக்கொள்ள எத்

செடிக்குச் செடி பறக்கும் பட்டுப் பூச்சிகளைக் கண்டு மகிழ்வான்....



இடும்பனும் பீமனும் மற்போர் புரிவதை இடும்பி பார்ப்பதுபோல் சந்திராவைக் கொண்டு ஒரு சித்திரம் வரையச் செய்து கல்கி மேலட்டையில் வெளியிட்டார்.



தனேயோ மரங்கள். வானத்துச் சந்திரன் போதும், நிலா ஆட்டத்துக்கு; வெறும் இருட்டுப் போதும், கள்ளன் விளையாட்டுக்கு. காற்றடிக்கும் காலத்தில் பட்டம் பறக்க விடலாம்; காற்றாடி செய்து சுழல விடலாம். இன்னும் எத்தனையோ எளிதான, இன்பமான விளையாட்டுக்கள்.

இவற்றில் விட்டு விட்டுப் புத்தமங்கலம் சிறுவர்கள் ஈடுபட்டிருக்கையில், கிருஷ்ணமூர்த்தி மட்டும் எதிலும் கலந்து கொள்ள மாட்டான். ''இப்படி நோஞ்சானாய் இருக்கிறாயே, விளையாடினால்தானே உடம்பு தேறும்'' என்று பெரியவர்கள் சொன்னால், ''முதலில் உடம்பு தேறட்டும். அப்புறம் விளையாடுகிறேன்'' என்பான். அண்ணனோ, வேறு பையன்களோ பிடித்திழுத்து விளையாடச் செய்தால், ஒப்புக்குக் கொஞ்சம் ஓடியாடி விட்டு விலகிக் கொள்வான்; அல்லது, அவன் சரியாய் விளையாடாததைக் கண்டு, அவனுடைய கட்சிப் பையன்களே அவனை விலக்கி விடுவார்கள்.

விளையாட்டில் அவன் விருப்பம் கொள்ளாததற்குக் காரணம் என்ன? தன் வயதுப் பையன்கள் எல்லாம் தன்னைவிட உயரமாயும் பருமனாயும் இருப்பதைக் கண்டு அவன் ஒதுங்கி இருந்திருக்கக் கூடும். தன் சிறு உருவத்தை எண்ணி எண்ணி, உருவத்தினால் அல்லாமல், வேறு விதங்களினால், தன்னை ஊரார் மெச்சும்படி செய்ய வேண்டும் என்றும் கிருஷ்ணமூர்த்திக்குத் தோன்றியிருக்கலாம். அதனாலேயே, அவன் பின்னர், பாட்டினாலும், பேச்சினாலும், எழுத்தினாலும் களிப்பும் வியப்பும் ஊட்டிப் பலருடைய பாராட்டைப் பெற வேண்டும் என்று தீர்மானித்திருக்கலாம்.

கிருஷ்ணமூர்த்திக்கு விளையாடப் பிடிக்கா விட்டாலும், விளையாட்டைப் பார்க்கப் பிடிக்கும். பங்கு கொள்ளாமல் பார்ப்பதில் ஓர் ஆனந்தம். ஒரே சமயத்தில் மானசீகமாகக் கூடு விட்டுக் கூடு பாய்ந்து பலருக்குள் புகுந்து விளையாடலாம் அல்லவா? பின்னைப் பருவத்தில் அவன் பழகிய இந்த ''மாய வித்தை'' பிற்காலத்தில் கதை மாந்தரின் மனத்துக்குள் புகுவதற்கும், அரசியல் ஓட்டசாட்டத் தாச்சி ஆட்டங்களை, ஒரு பார்வையாளனாய்க் கவனிப்பதற்கும் உதவியாய் இருந்தது எனலாம்.

விளையாட்டை வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கையில், ''ஓடு, பிடி, விடாதே'' என்றெல்லாம் கிருஷ்ணமூர்த்தி கூவி, தனக்கு வேண்டிய பையன்களுக்கு ஊக்கம் ஊட்டுவான். அந்தப் பையன்கள் ஜயித்தால், ''பலே! பலே!'' என்று பாராட்டித் தட்டிக் கொடுப்பான்; தானே வெற்றி அடைந்தது போல் மகிழ்வான். தான் ஆதரித்த பையன்கள் தோற்றுப் போனாலோ தானே தோல்வுற்றதாக எண்ணி வருத்தப்படுவான்.

சில சமயம் சிறுவன் விலகித் தனிமையை நாடிச் செல்வான். பெருமாள் கோயிலுக்குப் பின்னே மறைந்து மனோரதப் பம்பரத்தைச் சுழல விடுவான். இன்னும் தள்ளி வெட்ட வெளியை அடைந்து, கற்பனைப் பட்டத்தைப் பறக்க விடுவான். பொழுது சாய நேரம் இருந்தால், சாலை வழியே பாடிக்கொண்டே இராஜன் வாய்க்காலுக்குச் செல்வான். அதன் கரையில் நிற்கும் மரங்களில் ஒன்றில் ஏறி, வாய்ப்பான கிளை ஒன்றில் உட்கார்ந்து ஏதேதோ முனகிக் கொண்டு சொல் விளையாட்டில் ஈடுபடுவான். குடியானவ ஆண்களும் பெண்களும் பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் நடமாடுவதைக் கவனிப்பான். ஆண்களின் உடற்கட்டையும் பெண்களின் இயற்கை அழகையும் ரசிப்பான்.

இருட்டுவதற்கு இன்னும் செல்லும் என்றால், கொள்ளிடக் கரைக்கு ஓடுவான். ஆடு மாடுகள் மேய்ந்து விட்டுத் திரும்புவதைப் பார்ப்பான். மாட்டின் கொம்புகளுக்கும் குளம்புகள் எழுப்பும் புழுதிக்கும் பயந்து சற்றே ஒதுங்குவான். ஒதுங்கிய இடத்தில் செடிக்குச் செடி பறக்கும் பட்டுப் பூச்சிகளைக் கண்டு மகிழ்வான்.

வயல் கரையில் நின்றபடி, வயல்களிலிருந்து கொக்குகள் பறந்து செல்வதைப் பார்ப்பான். குயிலின் குரல் கேட்டு, அது எங்கே ஒளிந்திருக்கிறது என்று அண்ணாந்து தேடிப் பார்ப்பான்.

கிருஷ்ணமூர்த்திக்கு இருட்டுப் பயம் கிடையாதாகையால் சில நாட்கள் அந்திப் பொழுதுக்குப் பிறகும் வயல் கரையில் உலாத்துவான். வானத்து மீன்களையும் வேலிப்புறத்து மின்மினிகளையும் பார்த்துக் கொண்டே நடப்பான்.

ஒரு நாள் இருட்டி வெகு நேரமாகியும் தம்பி வீடு திரும்பாததைக் கண்டு, அவனைத் தேடிக் கொண்டு அண்ணன் சென்றான். ''அப்படி என்னைப் பற்றிக் கவலை என்றால், நீயும் கூட வா'' என்று தம்பி சொல்லி, அடுத்த சில நாட்களில் அண்ணனுடன் கைகோத்துக்கொண்டு, நெடுகிலும் சுற்றினான். அங்கங்கே தான் கண்டுபிடித்த அதிசயங்களை மூத்தவனுக்குக் காட்டினான். சாலையின் ஓரங்களிலும், தோட்டங்களின் மத்தியிலும் குடிசைகளில் வசிப்பவர்களைப் பற்றிக்

கதை அளந்தான். இருட்டில் அசையும் உருவங்களைப் பற்றியும், கேட்கும் அரவங்களைப் பற்றியும் பிசாசுக் கதைகளைப் புனைந்து சொன்னான்...

வேறு எந்த ஆட்டம் கிருஷ்ணமூர்த்திக்குப் பிடிக்கா விட்டாலும், ஊஞ்சல் ஆட்டம் பிடிக்கும். பழியாய்ப் பிடிக்கும். மேலும் கீழும் வீசி ஆடுகையில் உண்டாகும் பித்தக் கிறுகிறுப்பு, தீவிர யோசனைக்கும் கற்பனைப் பெருக்குக்கும் உதவியானது அல்லவா? அந்தக் கிறுகிறுப்பு ஆட்டம் வாழ்க்கை நெடுகிலும் தொடர்ந்தது.

எத்தனையோ நாட்களில் தம்பியும் அண்ணனும் சேர்ந்து ஊஞ்சல் ஆடுவார்கள். ஆளுக்கொரு கம்பியைப் பிடித்துக் கொண்டு மணிக்கணக்கில் ஆடுவார்கள். ஆடிக் கொண்டே பாடுவார்கள். இடையிடையே தம்பி தன்னுடைய கீச்சுக் குரலைப் பற்றிக் குறைப்பட்டுக் கொள்வான். கீச்சுக் குரலானாலும் கேட்க நன்றாய்த்தான் இருப்பதாக அண்ணன் சொல்லித் தேற்றுவான். அதைக் கேட்டுத் தன் குறையை மறந்து மீண்டும் பாடுவான் கிருஷ்ணமூர்த்தி. பாட்டுடன் ஆட்டம், ஆட்டம், ஒரே ஆட்டம்.

பல ஆண்டுகளுக்குப் பிறகு சென்னையில் தாம் குடியிருந்த வீட்டில் கல்கி ஊஞ்சலாடுகையில் தம்மை நோய்படுத்துவதற்குக் காரணம், சிறுவனாய் இருக்கையில் ஓடியாடி விளையாடாததே என்று நினைத்து வருந்தியிருப்பார்.

தம்மைப் போல் தம் மகனும் விளையாடாமல் இருந்துவிடப் போகிறானே என்று அவருக்குக் கவலை. மற்றப் பெற்றோர்களைப் போல் பிள்ளையைப் ''படி படி'' என்று அவர் சொல்லாமல், ''படித்தது போதும் விளையாடு விளையாடு'' என்று தூண்டுவார். அவருடைய ஆசையையும் தன்னுடைய ஆசையையும் ஒருங்கே தீர்க்கும் விதத்தில் அவனும் நிறைய விளையாடினான். எல்லா ஆட்டங்களையும் விட அவனுக்குக் கிரிக்கெட்டில் ஆசை அதிகமாய் இருந்தது.

அதைப் பற்றி ராஜேந்திரனே சொல்லட்டும்:

கிரிக்கெட் ஆட்டத்தில் எனக்குள்ள ஆசையைக் கண்டு, பேட், பந்து, பேடுகள், விக்கெட்டுகள், பெயில்கள் உள்பட, முழு கிரிக்கெட் செட் வாங்கிக் கொடுத்தார் அப்பா. சென்னையில் டெஸ்ட் மாட்சுகள் நடக்கும் போதெல்லாம், கல்கி, உதவி ஆசிரியர் ஒருவருடன் என்னையும் ஆட்டம் பார்க்க அனுப்பி வைப்பார். ஒரு முறை, ''அப்பா! நீங்களும் தான் ஒரு தடவை கிரிக்கெட் மாட்சுக்கு



**ஸ்ரீ வல்லவி விநாயகர் குடமுழுக்கு**

தலம், தீர்த்தம், மூர்த்தி மூன்றுக்கும் புகழ்பெற்ற திருவிடைமருதூரிலே வீரசோழன் ஆற்றங்கரையில் கோயில் கொண்டிருக்கும் விநாயகர் பெருமான் வல்லவி விநாயகர் என்ற பெயரோடு வினைதீர்த்து வருபவர். இவருக்கு இந்த செப்டம்பர் மாதம் 12-ந் தேதி அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெற இருக்கிறது. இதற்குப் பொருளுதவி புரிந்து விநாயகப் பெருமானின் அருளைப் பெற விரும்புவோர்கள் டாக்டர் ஏ. சுந்தரம், 145, மகாதான வீதி, திருவிடைமருதூர் என்ற முகவரியுடன் தொடர்புகொள்ளவும்.

---

வாருங்களேன்'' என்று கூப்பிட்டேன். சரி என்று ஒப்புக் கொண்டார். ஆட்டத்தின் போது, ''இவன் எதற்கு ஓடுகிறான்? அவன் ஏன் மைதானத்திலிருந்து வெளியேறிவிட்டான்? இவன் எப்படி ஆட்டம் இழந்தான்?'' என்றெல்லாம் என்னைக் கேட்டுக் கொண்டிருந்தார். அப்பாவுக்குச் சொல்லித் தருகிற பெருமை எனக்கு!

அரை மணி நேரத்துக்கு மேல் அவரால் அங்கே உட்கார்ந்திருக்க முடியவில்லை. எழுந்து வீட்டுக்குப் போய் விட்டார்.

மறு வாரம் ''கல்கி''யில் ''கங்காதரா மாண்டாயோ!'' என்ற தலைப்பில், தமது உதவி ஆசிரியரைக் கொண்டு, ஒரு கட்டுரை எழுதச் சொல்லி வெளியிட்டார். அதில், கிரிக்கெட் மாட்சுகளைத் தாக்கு தாக்கென்று தாக்கி எழுதி யிருந்தது. அதைக் கண்டதும் எனக்கு அழுகையே வந்துவிட்டது. ''எதற்கடா இவரை வற்புறுத்தி அழைத்துப் போனோம்?'' என்றாகிவிட்டது.

(ஆ.வி. — 15-9-'63)

குறிப்பிட்ட தாக்குதல் கட்டுரை, 6—2—1949 கல்கி இதழில் வெளியானதாகும். கிரிக்கெட்டின் பரம விரோதிகளில் ஒருவரான பெர்னார்ட் ஷாவின் வாக்கியம் ஒன்று அதில் ஒரு மேற்கோளாய் வந்தது : ''பதினொரு தடித் தாண்டவராயன்கள் பந்தை எறிந்து பிடித்துக் கொண்டிருப்பது ; இந்த வேடிக்கையைப் பதினாறாயிரம் சோம்பேறிகள் பார்த்துக் கொண்டிருப்பது.''

விளையாட்டு ரசிகர்களிலேயே சிலருக்குக் கிரிக்கெட் பிடிப்பதில்லை—அது ஓர் ஆமை ஆட்டம் என்ற காரணத்தால். ஆகவே, வேகத்தையும் விறுவிறுப்பையும் விரும்பிய கல்கி, அதை விரும்பாததில் ஆச்சரியம் இல்லை.

1952 அக்டோபர் மாதத்தில், பாரதச் சாம்பியன் பட்டத்துக்கான சர்வதேச மல்யுத்தப் போட்டி சென்னையில் நடந்தபோது, அதைக் கல்கி ஆதரித்தார். கீழ் திசைச் சாம்பியன் கிங்காங்கைப் பாரதச் சிங்கம் தாராசிங் தோற்கடித்து இறுதி வெற்றி பூண்ட அந்தப் போட்டியைப் பற்றி, உதவி ஆசிரியர் ஸோமாஸைக் கொண்டு விமரிசனம் எழுதச் செய்து அதை 23–11–52 கல்கி இதழில் வெளியிட்டார்.

அந்த விமரிசனத்தைப் படித்துவிட்டு, பெண்மணி ஒருவர் கோபமான கடிதம் ஒன்றைக் கல்கி ஆசிரியருக்கு எழுதினார்:

ஒரு தடி மனிதனை மற்றொரு மாமிச மலை தன் முழு பளுவால் தாக்கி ஏறி மிதித்து, வதைத்து, கடித்து, மூக்கில் விரலை விட்டு ஆட்டி, வாயில் கையை விட்டுக் கிழித்து, தலையைத் தேங்காய் உடைப்பது போல் உடைத்து, கழுத்தை நெரித்து, காலால் உதைத்து, நகத்தால் பிராண்டி, இன்னும் சித்திரவதை எத்தனை உண்டோ அத்தனையும் செய்கிறார். இந்த மிருகத்தனமான நடவடிக்கையை ''ஒரு விளையாட்டு'' என்று கருதுவது எந்த நாகரிகத்துக்குப் பொருத்தம் என்று எனக்குப் புரியவில்லை. இந்த அருவருக்கத்தக்க கோரத்தைக் காண மனோதிடமுள்ள ஆண் சிங்கங்கள் போவதுகூட அவ்வளவு அதிசயமில்லை. சேலை கட்டின பெண் புலிகள் நூற்றுக்கணக்காகப் போய், ஆண்களோடு சரிநிகர் சமமாக, கூச்சலிட்டு எக்காளம் போட்டுக் குதிக்கிறார்களே, இந்த நாகரிகத்தைப்பற்றி எங்கே போய்ச் சொல்லி அழுவது?

இத்தகைய அநாகரிகமான ''ராட்சஸ விளையாட்டை''யும் அதைப் பார்க்கப் போன ரஸிக சிகாமணிகளையும் கண்டிப்பதை விட்டுத் தங்கள் பத்திரிகையில் அதைப் போற்றி ஒரு விமரிசனம் வந்திருப்பது விசனத்துடன் வியப்பும் அளிக்கிறது.

இப்படிப் பொரிந்து தள்ளியிருந்த கடிதத்தைக் கல்கி ஆசிரியர், நவம்பர் 30ம் தேதிய இதழில் வெளியிட்டார்.

அதற்கு அடியில் அவருடைய பதில்:

மேற்கண்ட கடிதத்தில் உள்ள கருத்துக்களை நமது நேயர்களில் பலரும் ஆமோதிக்கக் கூடும். வேறு பலர் ஆட்சேபிக்கவும் கூடும். பதினாயிரக்கணக்கான மக்கள் 'மல்யுத்தம்—ஒரு விளையாட்டு' என்று எண்ணிப் பணம் கொடுத்துப்போய்ப் பார்க்கிறார்கள் அல்லவா?

நம்மைப் பொறுத்தவரையில் மல்யுத்தம் ஒரு விளையாட்டாயிருந்தாலும் சரி, வினையாகவே இருந்தாலும் சரி, அது நமது நாட்டின் புராதன காலத்திலிருந்து வழி வழியாக வந்தது என்ற காரணத்தினால் அதற்குக் கொஞ்சம் சலுகை காட்ட விரும்புகிறோம்.

இராமர் முதலிய அவதார புருஷர்கள் 'மல் லார்ந்த தோளினாய்' என்று கவிஞர்களின் புகழுரைகளைப் பெற்றிருக்கிறார்கள்.

சிவபெருமான் அர்ச்சுனனோடு விளையாட்டாக மல்யுத்தம் செய்த கதை ''கிராதார்ஜுனீயம்'' என்னும் காவியமாக வரையப்பட்டிருக்கிறது.

சரித்திர காலத்தில், புகழ்பெற்ற காஞ்சி நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தி, நாட்டிலுள்ள மல்லர்களையெல்லாம் தோற்கடித்து 'மாமல்லன்' என்ற விருதுப் பெயரைப் பெற்றிருக்கிறார்.

மல்யுத்த விளையாட்டைப் பெண்களும் பார்த்துக் களிப்பது பற்றி நம் சகோதரி அருவருப்புடன் குறிப்பிட்டிருக்கிறார் அல்லவா?

ஆனால் பரமசிவனுக்கும் அர்ச்சுனனுக்கும் நடந்த மல்யுத்தத்தைப் பார்வதி தேவி கண்டு களித்ததாகக் காவியத்தில் படிக்கிறோம்.

ஏன்? இடும்பனுக்கும் வீமனுக்கும் நடந்த மற்போரை இடும்பனுடைய சகோதரியான இடும்பி பார்த்துக் கொண்டிருந்து, அதன் காரணமாகவே வீமன் பேரில் காதல்கொண்டு மாலையிட்டதாகவும் நாம் அறிகிறோம்.

இடும்பனும் வீமனும் மற்போர் புரிவதை இடும்பி பார்ப்பது போல், சந்திராவைக் கொண்டு ஒரு சித்திரம் வரையச் செய்து, அதை அதே இதழின் அட்டையில் கல்கி வெளியிட்டார்.

தமக்கு அவ்வளவாய் உடல் வலிமை இல்லாத காரணத்தால் போலும், உடல் வலிமையைப் போற்றினார் கல்கி. உடல் வலிமை மிக்க மாந்தர் பலரைத் தமது கதைகளில் படைத்தார்.

மாமல்லனைப் பழங்காலப் புதைவிலிருந்து கல்கி மீட்டுக் கொண்டு வந்து, அவனுக்குப் புத்துயிரும் புது பலமும் ஊட்டி, நம் கண் முன்னே உலவச் செய்தார். ஆயனச் சிற்பியின் மகள் சிற்பப் பாவையை, தெய்வமாக் கலையைப் பயின்றுடிய பேரழகி சிவகாமியை அவன் மீது காதல் கொள்ளச் செய்தார்.

பொன்னியின் செல்வன் நாவலில் வரும் சிறப்பான காட்சிகளில் ஒன்று, வந்தியத்தேவனுக்கும் மற்றொரு வீரனுக்கும் நடக்கும் மற்போர்:

திரும்பிய குதிரை முன்னேறி வந்து வந்தியத்தேவனின் குதிரையை அணுகியது. அதன் மேலிருந்தவன் வந்தியத்தேவன் பக்கம் சட்டென்று சாய்ந்து ஓங்கி ஒரு குத்துவிட்டான். அந்தக் குத்தின் அதிர்ச்சியினால் வந்தியத்தேவன் கதிகலங்கித் தடுமாறியபோது அவனுடைய ஒரு முழங்காலைப் பிடித்து ஓங்கித் தள்ளினான். வந்தியத்தேவன் தடாலென்று தரையில் விழுந்தான்..... அவனைத் தள்ளிய வீரன் குதிரையிலிருந்து கீழே குதித்து வந்தியத்தேவன் அருகில் வந்தான்; இக்பிரமை கொண்டவனைத் தள்ளாடி

எழுந்திருக்க முயன்ற வந்தியத்தேவனுடைய இடையிலிருந்த கத்தியைப் பறித்துத் தூர விசி எறிந்தான்; உடனே வந்தியத் தேவனுக்குப் புத்துயிர் வந்தது. ஒரு குதி குதித்து எழுந்து நின்றான். இரண்டு கைகளையும் இறுக மூடிக் கொண்டு வஜ்ரம் போன்ற முஷ்டியினால், தன்னைத் தள்ளிய ஆளைக் குத்தினான். குத்து வாங்கிக் கொண்டவன் சும்மா இருப்பானா? அவனும் தன் கைவரிசையைக் காட்டினான். இருவருக்குள்ளும் பிரமாதமான துவந்த யுத்தம் நடந்தது. கடோத்கஜனும் இடும்பனும் சண்டை போடுவது போல் போட்டார்கள். வேடன் வேடந் தரித்த சிவபெருமானும் அர்ச்சுனனும் கட்டிப் புரண்டதைப் போல் புரண்டார்கள். திக்கஜங்களில் இரண்டு இடம் பெயர்ந்து வந்து ஒன்றோடொன்று மோதிக் கொள்வது போல் அவர்கள் மோதிக் கொண்டார்கள்... கடைசியாக வந்தியத்தேவன் கீழே தள்ளப் பட்டான். அவனைத் தள்ளிய வீரன் அவன் மார்பின் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

(பாகம் 2; அத்தியாயம் 30)

இந்தக் கட்டத்தைப் படித்ததும், ''கதாநாயகனை வீரதீர வந்தியத் தேவனை யாரோ ஒருவன் தோற்கடிக்கலாச்சா !'' என்று ஆத்திரம் அடைகிறோம். ''அவன் தோற்றுப் போனதாக எழுதலாச்சா !'' என்று இந்த வரலாற்றின் நாயகர் மீது சீறுகிறோம். ஆனால் மேலே படிக்கையில், கதாநாயகனைத் தோற்கடித்தவன், கதைக்குப் பெயர் அளித்த பொன்னியின் செல்வனே என்பதை அறிந்ததும், கதையின் ஆசிரியர் மீது கொண்ட சீற்றம் அமைதிப் புன்னகையாய் மாறுகிறது. வந்தியத் தேவனுடனும், ஆசிரியருடனும் நாமும் சேர்ந்து, வெற்றி வீரனின் வலிமையை வியந்து கொண்டாடுகிறோம் :

ஆகா! இவர்தானா இளவரசர் அருள்மொழிவர்மர் ! இவர் கையிலேதான் எவ்வளவு வலிவு! என்ன விரைவு! குட்டுப்பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்படவேண்டும் என்பார்களே! குத்துப்பட்டால் இவர் கையினால் அல்லவா குத்துப்பட வேண்டும்! இவரிடம் அர்ச்சுனனுடைய அழகும் கம்பீரமும் இருக்கின்றன! பீமசேனனுடைய தேக பலம் இருக்கிறது! நாடுநகரமெல்லாம் இவரைப் போற்றிப் புகழ்வதில் ஆச்சரியம் ஒன்றுமில்லைதானே !

மகாத்மா காந்தியிடம் பக்தி பூண்டிருந்த கல்கி, அவருடைய அஹிம்சா வாதத்தை ஒப்புக் கொண்டிருந்தபோதிலும், ''ஆளுக்கு ஆள் எதிர்த்து நின்று, அநியாயங்களையும் அக்கிரமங்களையும்



**ஆடு வைக்காத வீடு!**

ஓர் ஏழை யூதர் தம் மதகுருவிடம் சென்று ''வீட்டில் கூட்டம் தாங்கமுடியவில்லை. நான், என் மனைவி, என் ஐந்து குழந்தைகள், என் தகப்பனார், என் தாயார், என் மாமனார், என் மாமியார் ஆகப் பதினொரு பேர்கள் ஒரு சின்ன அறையில் வசிக்கிறோம். மிகவும் கஷ்டமாக இருக்கிறது'' என்று சொன்னார். அதற்கு மதகுரு, ''இவர்களோடுகூட உன் ஆட்டையும் அந்த அறையில் கட்டி வை'' என்று சொன்னார். யூதருக்கு ஒன்றும் புரியவில்லை. என்றாலும் மதகுருவின் வார்த்தையைத் தட்டமுடியுமா? ஆகவே யூதர் ஆட்டையும் தம் அறையில் கட்டிக் கொண்டு மிகவும் அவதிப்பட்டார்.

பத்து நாட்கள் ஆயிற்று. யூதர் மீண்டும் மத குருவைப் பார்க்க வந்தார். ''என் வீட்டில் வசிக்கவே முடியவில்லை. தாங்கள்தான் ஏதாவது உபாயம் சொல்ல வேண்டும்'' என்று சொன்னார்.

உடனே மதகுரு, ''ஆட்டை அவிழ்த்து விடு'' என்றார்.

அவ்வளவுதான், யூதர் வீட்டுக்கு ஓடோடியும் வந்து ஆட்டை அவிழ்த்துவிட்டார். அதற்குப் பிறகு அவருக்கு ஏற்பட்ட இன்பம் சொல்லி முடியாது! ''ஆஹா! ஆடு போன பிறகு வாழ்க்கை எத்தனை இன்பமாக இருக்கிறது! குருவின் யோசனையே யோசனை!'' என்று குருவைப் புகழ்ந்தார். - நாடோடி

தடுப்பதற்கு, தேக திடமும் மனோதைரியமும் இந்நாட்டில் பிறந்த ஒவ்வொருவரும் பெற வேண்டியது அவசியம்'' என்ற கருத்தைக் கொண்டிருந்தார்.

ஒரு சமயம் ஓர் ஊரில் காலிகள் செய்த அட்டூழியங்களைக் கண்டித்துத் தலையங்கம் எழுதுகையில், தற்காப்புக்குத் தண்டோபாயம் அவசியம் என்பதை வற்புறுத்தினார் :

இளைஞர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு ''வஸ்தாத்'' ஆகப் பயில வேண்டும். மூளையை வறட்டிக் கொண்டு படித்துப் பரீட்சையில் முதன்மையாகத் தேறுவதினால் மட்டும் என்ன பயன்? பெண்டாட்டி பிள்ளைகளைக் கயவரிடமிருந்து காப்பாற்றிக் கொள்ள முடியாதவர்கள் எத்தனை படித்து எத்தனை கெட்டிக்காரர்களாயிருந்துதான் என்ன பிரயோசனம்?

(கல்கி இதழ் 2-8-'53)

கல்கியைப் பொறுத்த வரை, அவர் உடலால் வஸ்தாதாகப் பயிலத் தவறியபோதிலும், மனத்தால் பயில்வானாகப் பயின்று தேறியிருந்தார். எத்தனையோ விவாதக் களங்களில் 'மல்யுத்தம்' செய்தார். (தொடரும்)

# எஸ்ட்ரெலா சக்தி

இந்த சக்தி தரும் ஒலி உங்கள் காதுகளில் ரீங்காரம் செய்கிறது.




இந்த சக்தி தரும் ஒளியை நீங்கள் கண்ணெதிரே காணலாம்





**உங்கள் டிரான்ஸிஸ்டர் மற்றும் டார்ச்சில் எஸ்ட்ரெலா சக்தி காட்டும் அதிசயம் பாரீர்!**

**எஸ்ட்ரெலா** பாட்டரிகளின் சக்தி: குடத்தில் காவேரிபோல!



எஸ்ட்ரெலா பாட்டரீஸ் லிட்., பம்பாய்-400 019.

CMEB-2-203





முதல் பரிசு:
நீலவானத்தில்
வெள்ளை நாரைகள்
ஜானகி

இரண்டாவது பரிசு: உனக்கானது எனக்கு
சோம. மகாதேவன்



மூன்றாம் பரிசு:
அரும்புகள்
அரவிந்தன்

மூன்றாம் பரிசு:
செம்பொற்சோதி
ராஜலிமாமணா



# பரிசு பெற்ற நால்வர்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற ஸ்ரீமதி ஜானகி ஆரம்ப எழுத்தாளர். இதுவரையில் தமிழில் பிரசுரமான கதைகள் ஐந்தாறு இருக்கும். 1970ம் வருஷம் தினமணி கதிர் சிறுகதைப் போட்டியில் 'ஆசைக்கு ஒரு மிட்டாய்க் கடை' என்ற சிறுகதைக்கு மூன்றாம் பரிசு பெற்றவர்.

பள்ளிக்கூட நாட்களிலிருந்து சிறுகதை எழுதுவதில் கவனம் செலுத்தி வருகிறார் ஜானகி. இவர் இலக்கியத்தில் பி.ஏ.(ஆனர்ஸ்) பட்டதாரி. படித்தது புது தில்லி லேடி ஸ்ரீராம் கல்லூரியில். ஹிந்தி மொழியில் எழுதவும் படிக்கவும் தெரியும்.

இல்லஸ்டிரேடட் வீக்லி, மிர்ரர், ஹிந்துஸ்தான் டைம்ஸ் ஞாயிறு பதிப்பு ஆகிய ஆங்கிலப் பத்திரிகைகளிலும் ஸ்ரீமதி ஜானகி வேங்கடராமன் சிறுகதைகள் எழுதி வருகிறார்.

இவரது கணவர் ஸ்ரீ வேங்கடராமன் என்ஜினீயர். சிறு தொழில் அதிபர். ஒரே பிள்ளை ஸ்ரீராம், வெகு சுட்டி.

''எனக்குப் படிப்பதும் எழுதுவதும்தான் பொழுதுபோக்கு. நான் நிறைய ஆங்கில இலக்கியங்களைப் படித்திருக்கிறேன். சமீப கால ஆங்கில நூல்களையும் வாசித்து வருகிறேன்'' என்கிறார் ஸ்ரீமதி ஜானகி.

இவரது தந்தை மதுரை ஜில்லாவைச் சேர்ந்த லெப்டினன்ட் கர்னல் நாராயணன். அந்தக் காலத்தில் 'ஸிவில்ஸ்போர்ட்ஸ்' பத்திரிகையில் நிறையச் சிறுகதைகள் எழுதியிருக்கிறார். ராணுவ சேவையில் தந்தை ஈடுபட்டிருந்ததுதான் போட்டிக்கு ராணுவ வீரர்களைப் பற்றிய கதையை எழுதும் உணர்ச்சி வேகத்தை மகளுக்கு அளித்ததோ?

''கல்கிக்கு நான் எழுதிய முதல் கதை பரிசுக்குரிய கதையாக அமைந்ததில் எனக்கு ஒரே ஆனந்தம்!'' என்கிறார் ஸ்ரீமதி ஜானகி வேங்கடராமன்.

கிராமக் கதைகளில் ஈடுபாடு கொண்ட சோம. மகாதேவன் 'கிராம சேவக்' பயிற்சி பெற்றுப் பதினைந்து வருஷங்கள் 'கிராம சேவக்'காகப் பல கிராமங்களில் வளைய வந்திருக்கிறார்.

சோம. மகாதேவன் விருதுநகர் க்ஷத்திரிய வித்யாசாலாவில் எஸ். எஸ். எல். சி. படித்துத் தேறியவர். இவரது தந்தை பாவலர் செ. ரா. சோமசுந்தரம் நிறையக் கவிதைகள் எழுதியிருக்கிறார்.

1943ம் வருஷத்திலிருந்து — பள்ளிக்கூடத்தில் — படிக்கும்போதே சோம. மகாதேவன் சிறுகதைகள் எழுதி வருகிறார். அவரது முதல் கதை 'அன்றும் இன்றும்' இராம. சடகோபன் நடத்திய 'தியாகி' பத்திரிகையில் வெளியாயிற்று.

இதுவரை சோம. மகாதேவன் இருநூற்றி முப்பது கதைகளுக்கு மேல் எழுதியிருக்கிறார். பெரும்பாலான கதைகள் கிராமப்புறக் கதைகள். 'கல்கி' மாவட்டப் போட்டியில் பரிசு பெற்றிருக்கிறார். குடும்ப நலத் திட்டம், தேசிய ஒருமைப்பாடு பற்றிப் பிரசார நாடகங்கள் நடத்தி அரசிடம் பரிசு பெற்றவர். முப்பதுக்கு மேற்பட்ட ரேடியோ நாடகங்கள் எழுதியுள்ளார்.

கல்கி, கலைமகள், குமுதம், அமுதசுரபி என்று பல பத்திரிகைகளில் இவரது பல குறுநாவல்கள்; சிறுகதைகள் இடம் பெற்றுள்ளன.

இவரது முதல் சிறுகதைத் தொகுப்பு 'பிள்ளையார் கவசம்'. (வானதி பதிப்பகம், சென்னை-17.)

தற்சமயம் சோம. மகாதேவன் கிராம வளர்ச்சி உள்ளாட்சித் துறையில் விளம்பர உதவியாளராகப் பணியாற்றி வருகிறார். இவருக்கு ஒரு பெண்ணும் பையனும் உள்ளனர். இவரது மகளுக்குத் திருமணம் நிச்சயமாகியிருக்கிறது. இவரது குடும்பம் திண்டுக்கல்லில் மாமனார் வீட்டில் இருக்கிறது. இவர் சென்னையில் தனியாக ஓர் அறையில் வசித்து வருகிறார். காரியாலயம் முடிந்து வீடு திரும்





பியதும் இவருக்கு எழுதுவதும் படிப்பதும் தான் பொழுதுபோக்கு.

''கதைகளுக்கு முக்கியத்துவம் தரும் பத்திரிகை கல்கி. அந்தச் சிறந்த பத்திரிகையில் பரிசு பெறுவதைப் பாக்கியமாகக் கருதுகிறேன்!'' என்கிறார் பலநாள் எழுத்தாளர் சோம. மகாதேவன்.

புது தில்லியிலும் மேட்டூர் அணையிலும் இருக்கும் மூன்றாவது பரிசு பெற்ற திரு ராஜரத்தினத்துக்கும் வெ. முரளிநாதனுக்கும் கடிதம் எழுதி அதில் பல வினாக்களை எழுப்பியிருந்தோம். அவர்களிடமிருந்து கிடைத்த விவரங்கள் இதோ:

கல்கியின் மூலமாக முதன் முதல் அறிமுகமாகும் எழுத்தாளர் ''ராஜ சியாமளா'', எஸ். ராஜரத்தினம் என்ற இயற் பெயர் கொண்ட இவரது முதல் கதை 'செம்பொற் சோதி'யே கல்கியின் பரிசுக் கதையாயிற்று. தமது ஒரே மகளின் பெயரைப் புனைபெயராகக் கொண்டு கல்கிக்கு எழுதினார். இவரது மனைவி ஸ்ரீமதி லட்சுமி ராஜரத்தினம் பல சிறுகதைகளை எழுதிப் புகழ் பெற்றவர்.

திரு ராஜரத்தினம் புதுதில்லியில் வேலை வாய்ப்பு நிலையத்தின் அதிகாரி. பொருளாதாரம், அரசியல், சரித்திரம் மூன்றிலும் சென்னை சர்வகலாசாலையின் எம். ஏ. பட்டதாரி. பாகல்பூர் சர்வகலாசாலை சட்டப்படிப்பும் பெற்றுள்ளவர். பட்டப் படிப்பு திருச்சி அர்ச் சூசையப்பர் கல்லூரியில். தெப்பக்குளம் இராஜு-வேட் என்று தம்மை வர்ணித்துக் கொள்கிறார், பெருமிதத்துடன். தற்சமயம் பாதுகாப்புத் துறையைச் சேர்ந்த அந்நிய மொழிக் கல்லூரியில் பிரெஞ்சுமொழி டிப்ளமாவுக்கு இரண்டாவது ஆண்டில் அடியெடுத்து வைத்திருக்கிறார். இவருக்குத் தெரிந்த மொழிகள் ஆங்கிலம், சம்ஸ்கிருதம், ஹிந்தி. பரிச்சயமானவை: மலையாளம், தெலுங்கு, கன்னடம்.

பிடித்தமானவை: ஆங்கிலக் கவிதையும், தமிழ்நாவலும் — குறிப்பாகச் சரித்திர நாவல்கள்.

அருமை மகள் ராஜ சியாமளாவுடன் விளையாடுவதற்குப் பொழுது போதவில்லை என்றுகுறைப்பட்டுக் கொள்ளும் இவரைப் போட்டியில் கலந்து கொள்ளச் செய்தது எது? ஏற்கெனவே எழுத்துத் துறையில் ஓரளவு பிரபலமடைந்துள்ள மனைவி 'நீங்கள் ஏன் எழுதக் கூடாது?' என்று கேட்டதும் 'என் பெயரை வைத்து எழுதேன்!' என்று அருமை மகள் சொன்னதும்தானாம்!

மூன்றாவது பரிசுபெற்ற வெ. முரளிநாதன் சிறுகதை உலகுக்கு ஏற்கெனவே அறிமுகமானவர். ஆனந்தவிகடன் 1967 ஜனவரி இதழில் 'அன்புக்கு ஏழை' என்ற முத்திரைக் கதை எழுதிப் பிரபலமானவர். தினமணி கதிர், தீபம், கண்ணதாசன், அமுதசுரபி ஆகிய பத்திரிகைகளில் இவரது 24 சிறுகதைகள் பிரசுரமாகியிருக்கின்றன. எனவே கல்கியில் பரிசு பெறும் 'அரும்புகள்' இவரது வெள்ளி விழாச் சிறுகதை!

தஞ்சை மாவட்டம் வைத்தீசுவரன் கோவில் இவரது பிறந்த ஊர். முப்பத்தியொரு வயதான இளைஞர் வெ. முரளிநாதன் மேட்டூர் கெமிகல்ஸில் டிரான்ஸ்போர்ட் செக்ஷன் சூபர்வைசராகப் பணியாற்றி வருகிறார். பிரம்மச்சாரி. இலக்கிய உலகில் திரு நா. பார்த்தசாரதி இவருக்கு மானசீகக் குரு. அவருக்கு மதிப்புத் தர 'அரவிந்தன்' என்ற புனைபெயரைச் சூட்டிக் கொண்டுள்ளார்.

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்று ஜொலிக்கும் இந்த நான்கு சிறுகதை நட்சத்திரங்களுக்கும் நம் வாழ்த்துக்கள்.

# அத்தையா? மாமியா?

அமெரிக்காவுக்குப் போய் மேல் படிப்பு படித்துவிட்டு வந்த இளைஞனுக்கு அவனுடைய அத்தையும் மாமியும் தத்தம் பெண்ணைக் கொடுத்துக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும் என்று போட்டியிடுகின்றனர்.

அவனுடைய பெற்றோர்களும் இந்தப் போட்டியில் ஈடுபடு கின்றனர். தாய் தம் அண்ணன் மகளைக் கட்ட வேண்டும் என்கிறார். தந்தை தம் தங்கை மகளை என்கிறார். கடைசியில் போட்டி முற்றி இரண்டு பெண்களையுமே தம் மகனுக்குக் கட்டி வைப்பது என்று சமாதான உடன்படிக்கைக்கு வரு கின்றனர். அந்தச் சமயத்தில் தனயன் தான் அமெரிக்காவிலேயே ஒரு பெண்ணைக் கல் யாணம் செய்து கொண்டு வந்துவிட்ட தாக ஒரு குண்டைத் தூக்கிப் போடு கிறான்....இப்படிக் கதை செல்கிறது.

இந்த நகைச்சுவைப் படத்தில் ஜெய சங்கரும் உஷாநந்தினியும் பிரதான பாத்திரங்களை ஏற்று நடிக்கின்றனர்.

கௌரவ நடிகராக வரும் ஸ்ரீகாந்த் துக்கு வழக்கம்போல் அகௌரவமான காரியத்தைச் செய்யும் பாத்திரத்தை ஏற்று நடிக்கும் 'பாக்கியம்' கிடைத் திருக்கிறது.

வாலியின் "நான் பெத்த மகனே, நடராஜா" என்ற பாடலை டி. எம். சௌந்தர ராஜன் பாடியிருக்கிறார். பாடல் இன்றைய நாட்டு நிலவரத்தை மிக நன்றாகப் படம் பிடித்துக் காட்டுகிறது.

சிரித்து நேரத்தைக் கழிக்க விரும்புகிறவர் களுக்கு இது ஒரு நல்ல படம். —எஸ். வி. எஸ்.





## பிரேம் சாஸ்த்ர

ஒரு முறை தணிக்கைக் குழு மறுத்து மறு முறை தணிக்கையாகி 'ஏ' சான்றித ழும் பெற்ற படம். எனவே படத்தில் ஏதோ புதுமை இருக்கும் என்று நம்பினால் ஏமாற் றமே எஞ்சி நிற்கும். கதாசிரியராக வரும் தேவ் ஆனந்தின் உள்ளக் கருத்துக்களை, அவரை மௌனமாக நடிக்கவிட்டு, வெளியிடும் முறை எடுப்பாக அமைந்திருக்கிறது. அவர் ஜீனத் அமா னைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொள்ளாமலே வெளியேறிய பின் முடிச்சு இறுகுகிறது. அவள் அன்னையையே (பிந்துவை) அவர் மணம் புரிந்திருக் கிறார் என்பதும், அவள் மகளை ஜீனத் அமான் என் பதும் முடிச்சுக்கு மேல் முடிச்சாக விழுகின்றன. திரையுலகில் வயது வித்தியாசத்தைக் காட்டிவிட்டால், அப்புறம் கவர்ச்சிக்கு எங்கே போவது ? இப்படியும் நடக்குமா என்று கேட்டு விட்டால், கதையை எப்படிக் கொண்டு போவ எப்படி முடிப்பது ?

முடிச்சை அவிழ்க்க முனைந்த கதை பழைய பாட் டையிலே சென்று சிக்கலின்றி முடிந்து விடுகிறது. அதாவது ஜீனத் அமான் பிந்துவின் பெண் அல்ல; பிந்துவும் சட்டரீதியான அல்லது சம்பிரதாய ரீதி யான மனைவி அல்ல என்று ருசுவாகித் தேவ் ஆனந் தையும் ஜீனத்அமானையும் கரம் கோத்துக் கொள்ள விட்டுக் கன கச்சிதமாக முடிகிறது !

கவர்ச்சிக்காகச் சூட்டப்பட்டது 'பிரேம் சாஸ்த்ர' என்னும் தலைப்பு. ஆனால் படம் : 'பிரமை சாஸ்திரம்'. —ரா.வீ.

போட்டிக் கதை – 5



# சிவப்புச் சட்டை

‘தூரன்’



“அப்பா! இன்னிக்கு செஷன்ஸ் ஜட்ஜ் ஐயா ஒருத்தனுக்குத் தூக்குத் தண்டனை தந்திட்டாராம். பள்ளிக் கூடத்திலே வாத்தியாரையா பேப்பரிலேயிருந்து படிச்சுக் காட்டினார்” என்று இரைந்து கத்திக் கொண்டே சடமடி பள்ளியிலிருந்து கொண்டு வந்த புஸ்தகம் கரும் பலகை முதலியவை களைக் கீழே வைத்தான்.

சடமடிக்கு யாருக்காவது தூக்குத் தண்டனை கிடைத்தால் வெகு சந்தோஷம். தண்டனை கிடைத்தவனைத் தூக்கி விட்டால் சடமடியின் தகப்பனுக்கு இருபத்தைந்து ரூபாய்கிடைக்கும். அப்படிக் கிடைக்கும் போதுதான் சடமடிக்குப் புதிய சட்டை, நிஜார் கிடைக்கும். இனிப்பும் அப்பன் வாங்கி வருவான். வர வேண்டிய இனிப்பு சடமடிக்கு அச்சாரமாகவே மனத்துக்குள் இனிக்கத் தொடங்கியது. சடமடிக்கு இன்று இரட்டிப்பு சந்தோஷம். அவன் பள்ளிக் கூடத்தில் அந்த ஊர் விவசாயி மகன் ஒருவன் சிவப்புச் சட்டை போட்டுக் கொண்டு வந்திருந்தான். அந்த நிறம் சடமடியைக் கவர்ந்திருந்தது. வாத்தியார் தூக்குத் தண்டனையைப் பற்றிச் சொன்னதும் சடமடிக்கு இந்தத் தூக்கிலிடும் வரும்படியிலிருந்து அந்த விவசாயி மகனுடைய சிவப்புச் சட்டையைப் போல் ஒன்று வாங்கிவிட வேண்டும் என்று ஆசை. அதனால்தான் அந்தச் செய்தியை அவன் அத்துணை ஆதுரத்துடன் பிரகடனம் செய்தான்.



“கொலைகாரனைத் தூக்கிலிட்டு ரொம்ப நாளாச்சு. நல்ல காலம் இப்போது ஒன்று வந்திருக்கிறது. டேய், உன் பாட்டன் காலத்திலே ரொம்பத் தூக்குத் தண்டனை வெள்ளைக்காரன் ஆளறபோது உண்டுடா, கஷ்டப்படாம சாப்பிட்டுக்கிட்டு வந்தோம். இப்பொல்லாம் அத்தனை கொலைத் தண்டனை இல்லே. நீங்க பொறந்த அதிர்ஷ்டம். முன்னேயெல்லாம் நல்ல ராமா கிடைக்கும். இப்ப அத்தனை கவமில்லே” என்றான் கடுமங்கு மகன் சொன்னதற்குப் பதிலாக.

“இந்த ஆளைத் தூக்கிலிட்டு வர பணத்திலே எனக்குச் சிவப்புச் சட்டை வேணும்” என்றான் சடமடி.

இறைச்சியை வெட்டிக் கொண்டிருந்த அவன் மனைவி சரமனு சடமடியை ஒரு தினுசாகப் பார்த்துவிட்டுச் சுறுக் சுறுக்கென்று இறைச்சியை வெட்டினாள்.

“முன்னேயெல்லாம் சரமனு, மாசத்துக்கு நாலு தூக்காவது வருமாம். நூறு ரூபாய் கிடைக்கும். அதோட வைப்புக் கூலியா இருநூறு ரூபாய் வருசத்துக்குக் கிடைக்கும். அது பத்தும். இப்ப என்னடான்னு தூக்குத் தண்டனையும் குறைஞ்சு விலையும் ஏறிக் கொஞ்சம்கூடக் கட்டலே. இவன் சிவப்புச் சட்டை கேக்கறான், சிவப்புச் சட்டை, செனிட்டில் இரண்டு விடுவதுக்கில்லாம! மானியத்தையாவது ஏத்தறாங்களானு, மாட்டாங்க போல இருக்கு. ரயில்காரனுட்டம் நான் முரண்டு பிடிச்சா எலெக்டிரிக்கிலே கொளுத்தறேன்பாங்க. ஏழைக்கு இடமில்லே” என்றான் கடுமங்கு.

“இந்தாங்கறேன். இந்தத் தொழிலை விட்டுத் தொலே. என்ன தொழில்? ஆளைத் துடிக்கத்துடிக்கத் தூக்கிலே போடுறது. ஆகாச விமானம் இறங்கற இடத்திலே கூலிக்கு ஆயிரம் ரூபா வருமாங்கறேன். ஆபிஸிலே பியூனு ஐந்நூறு கிடைக்குமா மாசத்துக்கு? இப்படி ஒரு தொழிலைப் பார்த்துக்கிட்டுப் போனியா. இந்தப் பாவம் நமக்கு என்னாத்துக்கு?” என்று நறுக்கிய கறியை அள்ளிச் சட்டியில் இட்டபடியே உபதேசம் செய்தாள்.

“இந்தா, இது பரம்பரையா வந்த தொழில். அயோத்தி ராசாக்கள், ஆண்ட போதே நம்ம வம்சக்காரங்கதான் தூக்குப் போடறது தெரியுமிலே. துலுக்க ராச்சியம், வெள்ளைக்கார ராச்சியம் எல்லாமே நம்ம வம்சத்தைத்தான் வச்சிக்கிட்டிருக்கு. இதை விட்டு எப்படிப் போவது? போனா எனக்கு வேறே என்ன தொழில் செய்ய வரும்?”

“பரம்பரை பரம்பரைன்னு கட்டிக்கிட்டு அழாதே. எவன் இப்ப பரம்பரைத் தொழிலைச் செய்யறான்? பாப்பான் தோல் கடை வைக்கறான். பார்க்கறேயில்லே? ராசாக்கள் ரொம்பப் பேர் இப்ப ஹோட்டல் நடத்தறாங்கன்னு குளாயடியிலே பொண்டுக பேசிக்கிது. நாள் மாறுது. தொழில் மாறுது.

எல்லாரும் வாளற வகை மாறுது. நீதான் மாறலே. தூக்கிவிட்டே வாளப் பாக்கறே. பாவம், இந்தத் தூக்குத் தண்டனேயே தப்புங்கறேன்'' என்றான் சரமணா காரசாரமாக, கணவன் தொழிலின் இழிவைக்குத்திக்காட்டி.

''பாவம் என்ன இதிலே. அவனே யாரு கொலே பண்ணச் சொன்னது? நானா? இல்லே, ஜட்ஜ் அய்யாகிட்டே நான் போய் என் பொளப்புக்காக இவனேத் தூக்கிலே போடுன்னேனா? அவன் கொன்னான். அவரு தண்டிச்சாரு. நான் தூக்கறேன். இது என் கடமைன்னு செய்யறேன். கடமைன்னு செஞ்சா பாவமேது? அதைப் புரிஞ்சுக்க!'' என்றான் கடுமங்கு, தன்னுடைய தட்டையான பரந்த முகத்தில் கொண்டை மூக்குக்கடியில் புதராக மண்டிக் கிடந்த மீசையை முறுக்கி விட்டுக் கொண்டே.

''உனக்குப் பரிதாவமா இல்லே?'' என்று கேட்டாள் சரமணா சட்டித் தண்ணீரில் கைகளைக் கழுவியபடி.

கூரையில் பல்லி பேசியது. ஓர் எலி சமையல் பகுதிக்குள் கவரோரமாகப் பாய்ந்தது. அதைத் தூரத்திப் பூனே ஒன்று ஓடியது. அதை விரட்டச் சடமடி ஓடினான்.

''எனக்குப் பரிதாபமென்ன? குத்தம் பண்றவன் பரிதாபமில்லாம பண்ணினான். தண்டிக்கிறவன் பரிதாபமில்லாம தண்டிச்சான். அவன் முகரை மூடியிருக்கும். அவன் கழுத்தில் அவன் மேல் படாமல் சுருக்கை மாட்டுவேன். காலடிப் பலகையைத் தட்டி விடுவேன். அவன் முடிவான். அவனே விட்டு வைத்தால் எத்தினி அநியாமாக் கொலே செய்வானோ? முடியிருனதும் அவன் செஞ்சதுக் கெல்லாம் முடிவு, பாக்கிப் பேருக்கு விடிவு. இதிலே பரிதாபப்பட என்ன இருக்குது, சரமணா?''



சரமணாவின் தலே அரித்ததால் அதைச் சொறிந்து ஒரு பேனே எடுத்து நகங்களுக்கிடையில் நசுக்கினான்.

''சரமணா, அந்தப் பேன் பின்னே உபத்திரவம் கொடுக்குமின்னுதானே கொன்னே. அப்படித்தான் இந்த ஆளே நான் தூக்கப்போறேன். இவன் ஒரு மனுசப் பேனா!'' என்றான் கடுமங்கு பெரிய விழிகளைச் சுழற்றி.

இடீரென்று சரமணா சிரித்தாள். உள்ளே இருந்த சடமடி ஓடி வந்தான்.

''என்னத்துக்குச் சிரிக்கிறே?''

''போன வருசம் தூக்குத் தண்டனே கிடைச்ச ஒத்தனுக்கு உடம்பு சரியில்லேன்னு பெரிய ஆஸ்பத்திரியிலே வைத்தியம் செஞ்சு அவன் குணப்பட்டதும் அவனேத் தூக்கிலே போட்டீங்களே, அந்தப் பைத்தியக்





■ திருவாரூரில் மும்மூர்த்திகளும் பிறந்த இடங்களை வாங்கி நினைவாலயங்களாக்குவது என்ற லட்சியத்துடன் திரு வி. எஸ். தியாகராஜ முதலியார் அவர்களைத் தலைவராகக் கொண்டு ஒரு குழு இயங்கி வருகிறது. அண்மையில் தியாகையர் பிறந்த வீட்டை வாங்கியதுடன் இந்தப் பணி நிறைவெய்தியது. இதற்கென ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ஏற்கெனவே வழங்கியுள்ள நன்கொடைகளுடன் கடைசியாக பிரும்மகான சபாவில் கச்சேரி செய்து ரூபாய் ஐயாயிரம் அளித்தார். அன்று பிரும்மகான சபா தலைவர் திரு சித்ரா நாராயணசாமி ஸ்ரீமதி எம்.எஸ். மாக்ஸேஸே விருது பெற்றதற்காக சபா அங்கத்தினர்கள் சார்பில் பாராட்டும் மகிழ்ச்சியும் தெரிவித்துக் கொண்டார்.

■ வானதி பதிப்பகத்தார் திரு ஏ. வி. மெய்யப்பசெட்டியார் அவர்களின் 'எனது வாழ்க்கை அனுபவங்கள்' என்ற புத்தக வெளியீட்டு விழாவைக் கோலாகலமாக நடத்தினார்கள். திரு ஏ.வி.எம். அவர்களுக்கு உயர்நீதிமன்ற நீதிபதி திரு கிருஷ்ணசாமி ரெட்டியார் பொன்னாடை போர்த்திப் பாராட்டினார்கள்.

■ பிரிட்டனில் தயாரான கையடக்கமான இந்தக் கணக்கு இயந்திரம் விலையிலும் அடக்கமானதுதான். சாதனை மட்டும் ஓர் அளவில் அடங்காதது! பத்திலிருந்து ஆறு போனால் மீதி நாலு என்கிற ஆரம்பநிலைக் கணக்கு முதல் பெரிய பெரிய விஞ்ஞானிகள் பொறி இயல் நிபுணர்கள் போடவேண்டி நேரும் பிரும்மாண்டக் கணக்குகள் வரை சகலத்தையும் சில விநாடிகளுக்குள் வெகு சுலபமாகப் போட்டு முடித்துவிடும்!



காரத்தனத்தை நினைச்சுச் சிரிச்சேன்'' என்றான் சரமணு.

''நோய்க்கு வைத்தியம். குத்தத்துக்குத் தூக்கு. அதானே சரி.''

''அப்பா! எனக்கு இப்ப வர பணத்திலே சிவப்புச் சட்டை வாங்கியாறியா?'' என்று கெஞ்சினான் சடமடி.

''எங்களுக்கு மானியம் கூடுதலா வேணும், தூக்குக் கூலி கூடுதலா வேணும்னு கேக்கப் போறோம். கிடைச்சதும் வாங்கித் தாரேன்'' என்றான் தகப்பன்.

''அட வேலையே வாண்டாங்கறேன், நீ கூலி அதிகம் கேக்கறியே!'' என்றாள் மனைவி.

''இல்லேப்பா, இப்ப வரத்திலே சட்டை வேணும்'' என்று குடிசையின் மண் தரையில் விழுந்து புரண்டு அழுதான் சடமடி.

''என்னடா, இவன் இப்படிப் படுத்தறான்? தூக்குத் தண்டனை போட்டா உடனே காசு வந்திடுமாடா பயலே? தண்டனைக்கும் தூக்குக்கும் நடுவே எத்தினியோ நழுவல். அந்த ஆள் அப்பீலுக்குப் போகாமல் இருக்கணும். அப்பீல் வக்கீல், சர்க்கார் வக்கீலைவிட மட்டமாக இருக்கணும். அப்பத்தாண்டா பயலே எனக்கு இருபத்தைந்து ரூபா. அது நிலைக்கணும்னு போய்ச் சாமியைக் கும்பிடு'' என்றான் அப்பன், அவனைத் துரத்தியபடியே.

அவன் ஓடிவிட்டான்.

''என்னங்க, புள்ளைக்கு இப்படிச் சொல்லித் தறீங்க?'' என்றாள் சரமணு.

''என்ன தப்பு? எந்த டாக்டர் எல்லாருக்கும் மருந்தே இல்லாம குணமாகணும்னு வேண்டிப்பாரு? எந்த வக்கீலயா ஒருத்தனும் சண்டை பூசல் போட்டுக்கக் கூடாதுன்னு வேண்டிப்பாரு? கள்ள மார்க்கெட்காரன் நல்லா விளையணும்னு வேண்டிப்பானு? என் வரும்படி குறைய ஒண்ணும் நடக்கப்படாதுன்னு நான் வேண்டிக்கச் சொன்னா என்னங்கறேன்? தூக்குத் தண்டனை நிலைச்சாத்தானே அவனுக்குச் சேப்புச் சட்டை. நீ போய் எனக்குப் பொங்கிப் போடற உன் வேலையைப் பாரு, நான் என் வேலையைப் பாக்கறேன், சாமி அவர் வேலையைப் பார்த்துக்குவாரு'' என்று சொல்லிவிட்டு அவன் எழுந்து வெளியே போனான்.

வீட்டுக்குக் கொஞ்ச தூரத்தில் ஒரு சிறிய பாழடைந்த கோயில். அதில் விளக்குக்கூடக் கிடையாது. அதன்முன் நின்று மகன் சடமடி கண்களை மூடிக் கொண்டு முணுமுணுப்பதைக் கண்ட தூக்கு மேடை எக்ஸிக்யூடிவ் அப்பனுக்கு மகன் என்ன வேண்டிக் கொண்டிருக்கிறான் என்பது தெரியும். அவன் பாட்டுக்கு மேலே நடந்தான்.

இப்பொழுது நடைபெறுகிறது!

சென்னை

# தேவிபாரடைஸ்

(70MM ஏர்கண்டிஷண்ட்)

# அகஸ்தியா

(70MM)

# ராக்ஸி

மற்றும்

தென்னகமெங்கும்

நடிகர்திலகம்

**சிவாஜிகணேசன்**

இரு மாறுபட்ட வேடங்களில் நடிக்கும்



சுஜாதாவின்

# என் மகன்

ஈஸ்ட்மென்கலர்

டைரக்ஷன்

**C.V.ராஜேந்திரன்**

இசை

M.S.விஸ்வநாதன்







ARIES

# மகிழ்ச்சி மிக்க மணமகளாகும் எழில்மிகு மாலாவுக்கு வயது 22.






மினுமினுப்பான
அவள் சருமத்தை,
இயல்பாகவே
தூய நறுமணம்
கொண்டு
பாதுகாக்கும் சோப்

## மைசூர் சாண்டல்

உங்கள் சருமம் மாசு மறுவற்று
மிருதுவாக மிளிர
மைசூர் சாண்டல் சோப்.

தயாரிப்பாளர்கள்:
கவர்மெண்ட் சோப் பாக்டரி, பெங்களூர்.



பூரண விற்பனையாளர்கள்: மைசூர் சேல்ஸ் இன்டர்நேஷனல் லிமிடெட் பெங்களூர் - பம்பாய் - புது டில்லி - கல்கத்தா - சென்னை - செகந்திராபாத்

HCA/MSIL/SS/2.

# திருடர்கள்

ர.சு.நல்லபெருமாள்

## 8. ஆடம்பர வாழ்க்கைக்கு அரசியல்

"கையாலாகாத பயல்களெல்லாம் தலைவர்களாக வந்து விட்டார்கள். புரட்சிக் கட்சி மட்டும் இன்று நாட்டை ஆண்டு கொண்டிருக்குமானால், இந்தப் பிரின்ஸிபால் படும்பாடு... மக்கள் மன்றத்தில் நிறுத்திச் சுட்டுக் கொன்றிருப்பேன்" என்று மனத்துக்குள்ளேயே உறுமிக் கொண்டார், கருணாகரன். அவருடைய காரும் உறுமியவாறே ஓடிக் கொண்டிருந்தது.

கருணாகரன் இவ்வளவு தூரம் மனம் உளைவதற்குக் காரணம் இருந்தது. நான்கு மாணவர்களுக்கு அந்தக் கல்லூரியில் இடம் வாங்கித் தருவதாகச் சொல்லி ஒவ்வொரு மாணவனிடமிருந்தும் இருநூறு ரூபாய் பெற்றிருந்தார். தமக்கு என்று பெற்றுக் கொள்ளவில்லை, கட்சியின் கட்டட நிதிக்காக என்று பெற்றுக் கொண்டார்.

கருணாகரன் மற்றவர்களிடமிருந்து பணம் பெறும் விதமே ஒரு கலைதான். பணத்தைப் பற்றி அக்கறை கொள்ளாதவர் என்று தான் மற்றவர்கள் நினைத்தார்கள். பணத்தின் மீது அவர் காட்டும் அலட்சியமும், பணம் தர இயலாதவர்களிடம் அவர் காட்டும் பரிவும் தாம், அவருடைய தொழில் இரகசியம். பணத்துக்காக அவசரப் படாதவரைப் போல் நடிக்கும் திறமையும்; அதே சமயம், பண விஷயத்தில் விட்டுக் கொடுக்காமல், மற்றவர்கள் உணராதவாறு கறந்து விடும் ஆற்றலும் அவருக்கே கைவந்த கலையாகும்.

தற்போது கருணாகரன், புரட்சிக் கட்சியின் மாவட்டத் தலைவராக இருந்தார். கிட்டத்தட்ட முப்பது ஆண்டுகளாகவே ஏதாவதோர் அரசியல் கட்சியில் பங்கு கொண்டு பெற்ற அனுபவம், இன்று தலைமைப் பதவி வகிக்க உதவியது. சட்டம் படித்து முடித்து விட்டு வெளியே வந்ததும்தான் தம்முடைய தவற்றை உணர்ந்தார் கருணாகரன். வக்கீல் தொழிலுக்கும் தம்முடைய அறிவுக்கும் எவ்விதப் பொருத்தமும் இல்லையென்பதை உணர்ந்த போது திகைத்தார். முதல் இரண்டு ஆண்டுகள் ஒரு வழக்கில் கூட ஆஜராகும் வாய்ப்பு அவருக்குக் கிடைக்கவில்லை. அப்போதுதான் அவருக்கு ஒரு யோசனை தோன்றியது. ஏதாவது ஓர் அரசியல் கட்சியில் சேர்ந்து கொண்டால், வருமானத்துக்கும் புகழுக்கும் வழி பிறக்கும் என்பதை உணர்ந்தார்.

நாற்பது ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு, புகழ்பெற்ற வக்கீல்கள் — ராஜாஜி, மோதிலால் நேரு, சாப்ரு போன்றவர்கள் — அரசியல் கட்சியில் சேர்ந்தார்கள். தங்களுடைய தொழிலையும், அபரிமிதமான வருமானத்தையும் தியாகம் செய்துவிட்டு அரசியலுக்கு வந்தார்கள். அதனால்தான் அன்றைய காங்கிரஸ் கட்சி, தியாக உணர்வாலும், நேர்மையாலும், சேவையாலும் ஒளிவிட்டது. இன்று, அரசியல் கட்சியிலிருந்து லாபம் பெற, பல வக்கீல்கள் அரசியலில் பங்குபெறத் தொடங்கி விட்டார்கள். அரசியலும் சீரழிந்து விட்டது.

இலகுவில் ஏமாறக்கூடிய வர்க்கம் எது என்பதைப் பற்றிக் கருணாகரன் யோசித்தார். வறுமையில் காலம் கழித்துக் கொண்டிருந்த பாட்டாளி இனத்தைக் கைக்குள் போட்டுக் கொள்ள எண்ணிப் புரட்சிக் கட்சியில் சேர்ந்தார்.

புரட்சிக் கட்சிக்காரர்களை அப்போது அரசாங்கம் வேட்டையாடிக் கொண்டிருந்தது. அவர்கள் தலைமறைவு வாழ்க்கையில் ஈடுபட்டு ஆங்காங்கே திடீர் திடீரென்று வெளிப்பட்டுக் கொலை, கொள்ளை, வெடி வைப்பது போன்ற நடவடிக்கைகளில் ஈடுபட்டார்கள். பிடிபட்டவர்களின் சார்பில் வழக்கு மன்றத்தில் வாதாடக் கருணாகரன் முன்வந்தார். வழக்கில் வாதாடத் தமக்குப் பணம் தேவை இல்லை என்று மறுத்து விட்டார். வழக்கு நடைபெறும் போது தேவையான சில்லறைச் செலவுகளை மட்டும் கட்சி அங்கத்தினர்கள் உண்டியல் மாதிரி ஏதாவது சேகரித்துக் கொடுத்தால் போதும் என்று கூறி விட்டார்.

கருணாகரன் போட்ட கணக்கு பிரமாதம். அந்தச் சமயத்தில் புரட்சிக் கட்சியில் சேர்ந்திருந்த பாட்டாளிகளின் எண்ணிக்கை அந்த மாவட்டத்தில்மட்டும் ஆறாயிரத்துக்குக் குறைவில்லை. அவர்களிடமிருந்து ஒவ்வொரு வழக்குக்கும் ஐம்பது பைசா கிடைத்தால், மூவாயிரம் ரூபாய் சேரும். நாலணா பிரித்தால்கூட, ஆயிரத்து ஐந்நூறு கிடைக்கும். கட்சியைச் சேர்ந்த கிளைக் காரியாலயங்களின் பொறுப்பில் நிதி வசூலை விட்டு விட்டால், போதும்.

அப்படி ஒரு குயுக்தியான திட்டம், கருணாகரனுக்கு மிகுந்த லாபத்தைக்கொடுக்க ஆரம்பித்து விட்டது. பாட்டாளிகளுக்கு, தலைக்கு நாலணாவோ அல்லது எட்டணாவோ தான் செலவு. பல வழக்குகளுக்கு இப்படித் தான் கருணாகரன் 'இலவச'மாக ஆஜரானார். புரட்சிக் கட்சிக்காரர்களின் மீதுள்ள வழக்குகளுக்காக அவர் ஒரு பைசாக்கூடப் பெற்றுக்





கொள்ளாமல் ஆஜராவதைக் கண்ட பாட்டாளிகளுக்கு அவர் மீது அளவுகடந்த மதிப்பும், மரியாதையும் தோன்றின. ஏதோ சில்லறைச் செலவுகளுக்கு உண்டி குலுக்குகிறார்கள், அவ்வளவே என்று எண்ணினார்கள். இத்தகைய வழக்குகளில் வாதாடி வாதாடிக் கருணாகரனுக்கு வக்கீல் தொழிலில் நல்ல அனுபவம் கிடைத்தது. கட்சியைச் சேராத வேறு பலரும் வழக்குகளுக்காக அவரை நாடி வரத் தொடங்கி விட்டார்கள். பல வழக்குகளில் கருணாகரனுக்குத் தோல்வி ஏற்பட்டபோதிலும், அவருடைய வருமானத்தில் குறைவு ஏற்படவில்லை.

ஒரு வக்கீலின் தொழில் வாய்ப்பு, கிட்டத்தட்ட ஒரு சினிமா நடிகையின் வாய்ப்பைப் போன்றதுதான். ஒரு நடிகையின் படம், எந்தக் காரணத்தினாலாவது நூறு நாட்கள் ஓடிவிடுமேயானால் பிறகு, பட முதலாளிகள் அவளைத்தான் செம்மறி ஆட்டுக் கூட்டம் மாதிரி போய் மொய்ப்பார்கள். அதே மாதிரிதான் பரபரப்பான ஒரு வழக்கில் ஒரு வக்கீலுக்கு வெற்றி கிட்டிடுமேயானால், அதன் பிறகு, பல வழக்குகள் அவரைத் தேடி வரத் தொடங்கிவிடும். அப்போது பிரபலமான ஓர் அரசியல் கொலை வழக்கில் கருணாகரன் ஆஜர் ஆனார். அந்த வழக்கில் குற்றவாளி சார்பில் யார் வாதித்தாலும் வெற்றி நிச்சயம். சாட்சியங்கள் பலவீனமாயிருந்தன. கண்ணால் பார்த்த சாட்சியங்கள் எதுவும் இல்லை. அந்த வழக்கில் கருணாகரனுக்கு வெற்றி கிட்டியதும் அவருடைய புகழ் உயரத் தொடங்கி விட்டது. இதுவும் போதாது என்று இரகசியமாக நாலைந்து புரோக்கர்களையும் அமர்த்தியிருந்தார். அவர்கள் மூலமாகவும் வழக்குகள் வரத் தொடங்கின.

இதெல்லாம் பழைய கதை. இருபது ஆண்டுகளுக்கு முற்பட்ட கதை. இப்போதும் கட்சியின் தொண்டர்கள் வறுமையில் வாடிய படியே பல போராட்டங்களில் பங்கெடுத்துக் கொண்டிருக்கும் போது கருணாகரன், ஒரு ஜமீன்தாரைப் போல் வாழ்க்கை நடத்தி வந்தார். பெரிய பங்களாவும், காரும், விலை உயர்ந்த படாடோபப் பொருள்களும், பொமரேனியன் நாயும், அழகான சயாமிஸ் பூனையும் மூன்றுந்தார இளம் மனைவியுமாக வாழ்ந்து வந்தார்.

'புரட்சிக் கட்சித் தலைவரை ஒரு கல்லூரித் தலைவர் மதிக்கவில்லையே?' என்னும் மன உளைச்சலோடு நீதிமன்றத்தை நோக்கிக் காரைச் செலுத்திக் கொண்டிருந்த கருணாகரன், தெருவின் ஒரு திருப்பத்தில் கூட்டம் கூடியிருந்ததைப் பார்த்துக் காரை நிறுத்தினார். ஒரு பெரிய 'கெடிலாக்' காரும்; ஒரு மாட்டு வண்டியும் மோதி விபத்துக்குள்ளாகியிருந்தன. தம்முடைய காரை நிறுத்தி விட்டு, கூட்டத்தை நோக்கி விரைந்தார். அப்பொழுதுதான், அடிபட்ட ஒரு சிறுவனை ஆம்புலன்ஸ் வண்டியில் ஏற்றிக் கொண்டிருந்தார்கள். போலீஸ்காரர்கள், 'கெடிலாக்' காரின் சொந்தக்காரரை அணுகி விசாரித்துக் கொண்டிருந்தார்கள். மாட்டு வண்டிக்குப் பக்கத்தில் ஒரு வயதான கிழவர் அழுது கொண்டிருந்தார். கருணாகரன், அந்தக் கிழவரை நெருங்கினார்.

''அடி பலமோ....?'' என்று அக்கறையோடு கேட்டார்.

''ஒன்றும் தெரியவில்லை. மூச்சுப் பேச்சு இல்லை. எனக்கு அடிபட்டிருக்கக் கூடாதா?'' என்று புலம்பினார் கிழவர்.

''இது எப்படி நடந்தது?''

''சனியன் புடிச்ச மாடு, காரைக் கண்டு மிரண்டு குறுக்கே பாய்ந்து விட்டது'' என்றார் கிழவர்.

கருணாகரன், கிழவரின் கையைப் பற்றி மெதுவாக வண்டிக்குப் பின்னால் அழைத்துச் சென்றார். இரகசியமாகப் பேசத் தொடங்கினார்.

''பெரியவரே! மாடு குறுக்கே போனதாகச் சொல்லிக் கொண்டிருக்காதேயும்'' என்றார்.

''பின்னே...? மாடுதானே மிரண்டுபோய்க் குறுக்கே பாய்ந்து விட்டது?''

''இப்படிச் சொன்னால், போலீஸ், உம்மைத் தான் பிடிப்பார்கள்.''

''ஐயோ....!'' கிழவர் பதறினார்.

''கார்தான் திடீரென்று வந்து மோதி விட்டதாகச் சொல்ல வேண்டும். இல்லையென்றால் உமக்குத்தான் ஆபத்து.''

''ஓ...'' — கிழவர், கண்ணீரைத் துடைத்துக் கொண்டு யோசித்தார்.

''சரிங்க ... நல்ல வேளை, கடவுள் மாதிரி வந்து யோசனை சொன்னீங்க... என் பையன் பிழைப்பானா? இரத்தமாகக் கொட்டியிருக்கே?''

''ஆஸ்பத்திரிக் காரிலே ஏற்றியாச்சே. இனி பயமில்லை. யாராவது பணம் விஷயமாக உம்மிடம் ஏதாவது கையெழுத்து கேட்டால் போட்டு விடாதேயும். ஆஸ்பத்திரிச் செலவை அந்தக் கார்க்காரரிடமிருந்தே நான் வாங்கித் தருகிறேன். ஆயிரக்கணக்கில் வாங்கித் தருகிறேன்.''

''ஐயா யாரு? தெரியலையே?''

''நான் இங்கே வக்கீலா யிருக்கிறேன். சாயங்காலம் ஆஸ்பத்திரிக்கு வந்து பார்க்கிறேன். உங்களிடம் பணம் விஷயமாக யாராவது பேச்சை எடுத்தால் வக்கீலிடம் கேட்டுப் பதில் சொல்வதாகச் சொல்லி

விடுங்கள். இல்லையென்றால், உங்களை ஏமாற்றி விடுவார்கள். எதிலும் கையெழுத்துப் போட்டு விடாதீர்கள். நான் கட்டாயம் சாயங்கலாம் ஆஸ்பத்திரிக்கு வருவேன்.''

அவர்கள் பேசிக் கொண்டிருந்தபோது போலீஸ்காரர் அந்தப் பக்கம் வந்து விடவே, கருணாகரன் மெல்ல நழுவி, கூட்டமிருந்த பக்கத்துக்குப் போய் விட்டார். கூட்டத்துக்கு நடுவே நின்று கொண்டிருந்த போலீஸ் இன்ஸ்பெக்டரை நெருங்கினார். சப்-இன்ஸ்பெக்டர் காரின் சொந்தக்காரரை விசாரித்துக் கொண்டிருந்தார். அந்தக் கார், கஜேந்திரா மில் அதிபர் ராகவனுடையது என்பது கருணாகரனுக்குத் தெரியும்.

''என்ன மிஸ்டர் ராகவன்?'' என்று கேட்டுக் கொண்டே ராகவனை நெருங்கினார் கருணாகரன்.

''ஒரு சிறு ஆக்ஸிடெண்ட்'' என்றார் ராகவன்.

''ஆபத்து ஒன்றுமில்லையே?''

''நோ, நோ. அடி கொஞ்சம் பலம். அவ்வளவுதான். உயிருக்கு ஆபத்தில்லை'' என்றார் சப்-இன்ஸ்பெக்டர்.

''மிஸ்டர் கருணாகரன்! நீங்கள் கோர்ட் பக்கம்தானே போகிறீர்கள்?'' என்று கேட்டார் ராகவன்.

''ஆமாம்.''

''ஒரு சின்ன உதவி.''

''என்ன வேண்டும்?''

''என் பெண்ணுக்குச் சாப்பாடு கொண்டு வந்தேன். வழியில் இப்படி ஆகிவிட்டது. உங்களுக்குச் சிரமம் இல்லையென்றால், இந்த டிபன் காரியரை அவளிடம் கொடுத்து விட வேண்டும்.''

''நளினியிடம்தானே...? கொடுத்து விடுகிறேன்.''

''ஆவுடையப்ப பிள்ளையின் ஆபீஸில் அவள் இருப்பாள்!''

''எனக்குத் தெரியும். நான் கொடுத்து விடுகிறேன்'' என்று கூறி, டிபன்காரியரை வாங்கிக் கொண்டார் கருணாகரன்.

''இந்த விபத்தைப் பற்றிப் பயப்பட வேண்டாம் என்று சொல்லுங்கள். இல்லையென்றால், கவலைப்பட்டுக் கொண்டே யிருப்பாள்.''

''ஓ...யெஸ்'' என்று கூறியவாறே, டிபன் காரியருடன் தம்முடைய காரை நோக்கி நடந்தார் கருணாகரன்.

கருணாகரனுக்கு உள்ளூற மகிழ்ச்சி. இந்த விபத்தினால் எப்படியும் இரண்டாயிரம் ரூபாயாவது லாபம் கிட்டலாம். மனத்துக்குள்ளேயே கணக்குப் போட்டுக் கொண்டார்.

இலகுவான கணக்குத்தான் – நீதிமன்றத்தில் ஐயாயிரம் நஷ்டஈடு கேட்டு வழக்குத்



தொடர்ந்தால், மூவாயிரமாவது கிடைக்கலாம். அடிபட்டவனுக்கு ஆயிரம் கொடுத்தது போக மீதி இரண்டாயிரம் அவருக்குத்தான். அடிபட்டவனுடைய கையோ காலோ நிரந்தர ஊனம் அடைந்துவிட்டால், பதினாயிரத்துக்கு வழக்குப் போடலாம். மூவாயிரத்தைக் கொடுத்து விட்டால் பாக்கியுள்ள ஏழாயிரம் அவருக்கு. மாலையில் ஆஸ்பத்திரிக்குப் போனால் தெரியும் அடிபட்டவனுடைய நிலை எப்படி என்பது. நல்ல வேளை, விபத்து நடந்த இடத்தில் வேறு வக்கீல் யாரும் இல்லை. இருந்திருந்தால் இந்த வாய்ப்பை அவன் தட்டிக் கொண்டு போயிருப்பான்...

கருணாகரன், கணக்குப் போட்டபடியே காரைச் செலுத்திக் கொண்டிருந்தார். ஆவுடையப்ப பிள்ளையின் அலுவலகத்தை அடைந்த போது, அங்கு நளினி இல்லை. "சாப்பாடு வராததால் ஹோட்டலுக்குப் போய் விட்டான்" என்றார் அங்கிருந்த குமாஸ்தா சண்முகம் பிள்ளை. டிபன் காரியரைக் குமாஸ்தாவிடம் ஒப்படைத்து விட்டு நீதிமன்றத்தை நோக்கிக் காரைச் செலுத்தினார் கருணாகரன்.

## 9. காதல் விபத்தும்; கார் விபத்தும்

"ஹோட்டலுக்குப் போவோம்; இன்னும் சாப்பாடு வந்து சேரவில்லை" என்றான் நளினி.

"இன்னும் கொஞ்சம் பொறுத்துப் பார்ப்போமே. வீணாக ஹோட்டலுக்குச் செலவழிப்பானேன்?" என்றான் சம்பத்.

"நேரமாகி விட்டதே. இன்னும் அரை மணியில் கோர்ட் ஆரம்பமாகிவிடும். வாருங்கள், போகலாம்" என்று கூறியபடியே எழுந்தான் நளினி.

இருவரும் பக்கத்துத் தெருவில் இருந்த கஸ்தூரி ஹோட்டலை நோக்கி நடந்தார்கள்.

"கோர்ட்டில் சிரித்தீர்களே, ஏன்?" என்று கேட்டான் நளினி.

"எப்போது?"

"கருணாகரனைப் பற்றி நம்முடைய சீனியர் ஏதோ சொன்னாரே அப்போது....?"

"ஓ.... அதுவா...?" என்று கேட்டு விட்டுப் பதில் சொல்லாமல் சிரித்தான் சம்பத்.

"என்ன விஷயம்?" — நளினி கேட்டான்.

"கருணாகரனைப் பற்றிய சொந்தவிஷயம்."

"என்ன அது?"

சம்பத் பதில் கூறாமல் சிரித்தபடியே நடந்தான்.

"ஏன் இன்று சாப்பாடு வரவில்லை?.... அனுப்ப மறந்து விட்டார்களோ?" என்று பேச்சை வேறு திசையில் திருப்பினான். நளினி சிரித்தான்.

"நான் கேட்டதற்குப் பதில் சொல்லாமல் பேச்சை மாற்றுகிறீர்களே!" என்றான்.

"அதுதான் சொன்னேனே, கருணாகரனின் சொந்த விஷயம் என்று."

"அந்த விஷயம் என்னது?" — அழுத்திக் கேட்டான் நளினி.

"நம்முடைய சீனியர் என்ன சொன்னார்?"

"ஆக்டிவாக இருக்க வேண்டும் என்று ஆசை மட்டும் இருந்தால் போதுமா? வெளியில் சொல்லிக் கொள்ளலாம், ஆக்டிவாக இருப்பதாக என்றார்."

"அதுதான்."

"அப்படி என்றால்?" — புரியாமல் கேட்டான் நளினி.

சம்பத் அவனைப் பார்த்துச் சிரித்தான்.

"பதில் சொல்லாமல் சிரிக்கிறீர்களே!"

"சீனியர் சொன்னதிலேயே பதிலும் இருக்கிறதே!" என்றான்.

"அதற்கும் வக்கீல் கருணாகரனுக்கும் என்ன சம்பந்தம்?"

"இன்னும் உனக்குப் புரியவில்லையா? அவர் சொன்னது கருணாகரனுக்குப் பொருந்தும்" என்றான் சம்பத்.

நளினி சற்று யோசித்தான். பிறகு திடீரென்று புரிந்துகொண்டு வியப்புடன் புருவத்தை உயர்த்திச் சம்பத்தைப் பார்த்தான். அவனுடைய பார்வையைப் புரிந்து கொண்டு, ஆமோதிப்பது போல் தன் தலையை அசைத்தான் சம்பத்.

கஸ்தூரி ஹோட்டலுக்குள் ஒரு தனி அறைக்குள் இருவரும் சென்று அமர்ந்தார்கள். அது ஒரு சிறு ஹோட்டல். மூக்காண்டி ஐயர் என்பவர்தான் அந்த ஹோட்டலின் சொந்தக்காரர், மானேஜர், சரக்கு மாஸ்டர் எல்லாம். அவருடைய இனிப்புப் பதார்த்தங்கள் அந்த வட்டாரத்தில் புகழ் பெற்றவை. வக்கீல்கள் அடிக்கடி அங்கு செல்வதால் மூக்காண்டி ஐயர், மிகுந்த சிரத்தையுடன் பதார்த்தங்களை ஆக்குவார். வக்கீல்களுக்கு மட்டும் தாமே சென்று பரிமாறுவார். மற்றவர்களுக்குப் பரிமாற இரண்டு சர்வர்களை வேலைக்கு வைத்திருந்தார். பாதாம் அல்வாதான் அவருடைய அபிமான பதார்த்தம். நளினியையும் சம்பத்தையும் கண்டதும் மூக்காண்டி ஐயர், முகம் மலர அந்த அறைக்குள் நுழைந்தார்.

"போன வாரம் வந்த பிறகு இன்றைக்குத்தான் வருகிறீர்கள். இப்போதுதான் பாதாம் அல்வா கிளறியிருக்கிறேன்" என்று கூறி விட்டு வெளியே செல்லப் புறப்பட்டார், மூக்காண்டி ஐயர்.

"ஐயர்! ஆளுக்கு இரண்டு ரவா தோசை. இவருக்கு மட்டும் முறுகல்" என்றான் நளினி. மூக்காண்டி ஐயர் உற்சாகத்தோடு தலையை அசைத்துவிட்டு வெளியேறினார். சற்று நேரத்தில் இரண்டு இலைகளில் சூடான பாதாம் அல்வாவுடன் வந்தார். நளினியின் முன்னால் ஓர் இலையையும் சம்பத்தின் முன்னால் ஓர் இலையையும் வைத்துவிட்டுச் சென்றார்.

"அப்படியானால் கருணாகரன் மூன்றாவது முறையாகக் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறாரே!" என்று கேட்டான் நளினி.

"ஆமாம்..." என்று கூறிக் கொண்டே இலையிலிருந்த அல்வாவில் கொஞ்சம் எடுத்து வாயில் போட்டுக் கொண்டான் சம்பத். அல்வா சூடாயிருந்ததால், வாயில் போட்ட

# எங்கும் பொங்கும் மங்களம்



இன்பம் தரும் இனிய நாட்கள்—
கல்யாணம் விசேஷ காலங்களில்
அணிந்து அழகு பார்க்க தினுசு
தினுசான பட்டுப் புடவைகள்.
விசேஷ காலங்களுக்கென்றே
விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட புடவை
ரகங்கள் நவீன மில் கைத்தறி ஜவுளி
ரகங்கள். உங்கள் விருப்பமறிந்து
செயல்படும் ஒரே நிறுவனம் — கீதா.

*தேவையானவற்றை தனித் தனி
மாடியில் தேர்ந்தெடுங்கள்*



# கீதா

## சில்க் & சாரி பஜார்

31-32, N.S.B.ரோடு, திருச்சி-620002

CROWN-G22

டாக்டர்கள் கூறுகிறார்கள்:

## 3 மாதங்கள் ஆன பிறகு, முழுமையான உடல் வளர்ச்சி பெற உங்கள் குழந்தைக்குத் தேவை திட உணவு.



**பாரெக்ஸ்**
உங்கள் குழந்தை சீராக வளர்ந்திட அனைத்தையும் அளிப்பதைப் பாருங்கள்: எளிதில் சீரணிக்கக்கூடிய புரதம். கூடவே வைட்டமின், கால்ஷியம், இரும்புச் சத்து மற்றும் கார்போஹைட்ரேட்.

3 மாதங்கள் முதல் 3 ஆண்டுகள் வரை உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு அவசியம் பாரெக்ஸ்.

| குழந்தையின் வயது | பாரெக்ஸ் அளவு |
|---|---|
| 3 – 6 மாதங்கள் | 1 – 2 தேக்கரண்டியளவு – தினம் இருமுறை |
| 6 – 9 மாதங்கள் | 3 – 4 தேக்கரண்டியளவு – தினம் மூன்று முறை |
| 9 மாதங்கள் – 3 ஆண்டுகள் | 4 – 6 தேக்கரண்டியளவு – தினம் நான்கு முறை |



உங்கள் பாரெக்ஸ் புத்தகத்தை இலவசமாகப் பெற, 25 பைசா தபால் தலை இணைத்து எழுதுக: டிபார்ட்மெண்ட் K-1, த.பெ. 16558, பம்பாய் 400 025 (எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்).

**பாரெக்ஸ்®**
கிளாக்ஸோ தயாரிப்பு



சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு

CMGF-42-104 TM

தும் கடவே, அல்வாவை வாய்க்குள்ளேயே புரட்டிக் கொண்டிருந்தான். அவன் படும் பாட்டைக் கண்டதும் நளினிக்குச் சிரிப்பு வந்தது. அவனும் அசடு வழியச் சிரித்துக் கொண்டான்.

நளினி ஏதோ சிந்தனையில் ஆட்பட்டவளாகச் சாப்பிடத் தொடங்கினாள். சம்பத்தைப் பார்த்துக் கேட்டாள்: "அப்படியானால், அவர் ஏன் திருமணம் செய்து கொள்கிறார்?"

"தான் அப்படி இல்லை என்று மற்றவர்கள் நம்பவேண்டும் என்பதற்காகத்தான்."

"ஓ......!"

நளினி புரிந்து கொண்டு தலையை அசைத்தாள். அவள் சாப்பிடுவதைப் பார்த்து ரசித்தான் சம்பத்.

"அல்வா பிரமாதம் இல்லையா?" என்று கேட்டான்.

நளினி அவனுடைய இலையைப் பார்த்தாள். இலை காலியாக இருந்தது. மூக்காண்டி ஐயர் ரவா தோசைகளுடன் வந்தார்.

"அல்வா கொண்டு வாரும்" என்று கூறிச் சம்பத்தின் இலையைச் சுட்டிக் காட்டினாள் நளினி.

"எனக்குப் போதும்" என்றான் சம்பத்.

"இன்னும் ஒரு பிளேட் சாப்பிடலாமே? மூக்காண்டி ஐயர், கொண்டு வாரும்" என்றாள் நளினி.

"உனக்கு?" — சம்பத் கேட்டான்.

"எனக்குப் போதும்."

"எனக்கும் போதும்."

"உங்களுக்குப் பாதாம் அல்வா பிடிக்கும்."

"நீயும் சாப்பிடுவதானால் நான் சாப்பிடுகிறேன்."

"இரண்டு பேருக்குமே கொண்டு வருகிறேன்" என்று கூறிவிட்டு ரவா தோசையை அவர்கள் முன்னால் வைத்துவிட்டு விரைந்து சென்றார், மூக்காண்டி ஐயர்.

சம்பத் ரவா தோசையைச் சாப்பிடத் தொடங்கினான். சாப்பிடும் போது மாத்திரம் அவன் அவலக்ஷணமாயிருப்பான். சாப்பாட்டை வாயில் திணித்துக் கொண்டு வாயைத் திறந்தவாறு அவன் சுவைப்பதைப் பார்க்க அருவருப்பாயிருக்கும். அவனுடைய கவர்ச்சியும் அழகும் சாப்பிடும்போது எப்படித்தான் மறைந்து விடுகின்றனவோ! நாகரிகமாகச் சாப்பிட அவனுக்கு யாரும் கற்றுக் கொடுக்கவில்லை போலும். மோர்ச் சாதமோ அல்லது பாயசமோ சாப்பிடும் போது, அவன் உறிஞ்சும் விதமே அருவருப்பாயிருக்கும். ஒரு விருந்தில் பலர் முன்னிலையில் சாப்பிடக் கொஞ்சம்கூட அருகதை இல்லாதவன். ஒன்றிரண்டு முறை அவனிடமே அதைப் பற்றிச் சொல்ல நினைத்தாள். ஆனால் அப்படிச் சொல்வது நாகரிகமில்லை என்று நினைத்துச் சும்மா இருந்துவிட்டாள் நளினி. அவனை நாகரிகமாகச் சாப்பிடப் பழக்க வேண்டும் என்று மட்டும் முடிவு செய்தாள்.

அதைத் தவிர அவனிடம் வேறு எந்தக் குறையையும் காணவில்லை. அவன்மீது அவன் கொண்டுள்ள அக்கறையை அவள் உணர்ந்திருந்தாள். அவனுடைய பேச்சு, பார்வை, நெருக்கம் எல்லாமே வெறும் நட்பு என்னும் எல்லையைத் தாண்டியிருந்தன என்பதை அவள் புரிந்து கொண்டுதான் இருந்தாள். ஆனால் அதைக் காதல் என்று முடிவு கட்டிக் கொண்டு, அதே நினைவில் மயங்கிப் போக அவளுக்கு விருப்பமில்லை. மொத்தத்தில் 'காதல்' என்பதிலேயே அவள் நம்பிக்கை இழந்திருந்தாள்.

தன்னுடைய கரிய நிறமும், எடுப்பாக அமையாத மூக்கும் பிறரைக் கவர முடியாது என்பதை உணர்ந்திருந்தாள். ஆனால் அதையெல்லாம் பொருட்படுத்தாமல் சம்பத் தன்னை நேசிப்பதை உணர்ந்ததும் அவன்மீது அவளுக்கு நன்றி உணர்வே தோன்றியது. அந்த உணர்வைக் காதலாக எண்ணிக் கொள்ள அவள் அறிவு மறுத்துவிட்டது.

நளினியின் சகோதரி, காதலித்துத்தான் மணந்தாள். திருமணத்துக்குப் பிறகு கணவனுக்கும் மனைவிக்கும் ஒத்து வராமல் அநேக நாட்கள் அவள், தந்தை வீட்டிலேயே இருந்தாள். 'கண்ணே மூக்கே' என்று, காதலிக்கும் போது குழைந்து குழைந்து மருகும் ஆண்கள், கல்யாணத்துக்குப் பிறகு கேவலமாக நடந்து கொள்ளும் விந்தையை நளினி பல குடும்பங்களில் கண்டிருந்ததால், காதல் விஷயத்தில் அக்கறை காட்டவில்லை. தன்னுடைய சகோதரியின் கண்ணீரையும், பெருமூச்சையும், மன வேதனையையும் கண்ட பிறகு, காதல் என்பதே ஓர் ஆணும் பெண்ணும் தங்கள் இயல்பை ஒருவரிடமிருந்து மற்றவர் அறியா வண்ணம் மறைத்துக் கொள்ளும் பாசாங்குத் தனம் என்ற முடிவுக்கு நளினி வந்தாள். கல்யாணத்துக்குப் பிறகு இயல்பான குணம் வெளிப்படும்போது, திகைக்க வேண்டியிருக்கிறது. அந்த மாதிரியான ஓர் ஏமாற்றத்துக்கு நளினி ஆளாகப் பிரியப்படவில்லை. பெற்



## குரங்கு 'க்யூ'!

எஸ். எல். என். எஸ். டிரான்ஸ்போர்ட்ஸ் என்ற ஸ்தாபனத்தாரைச் சேர்ந்த பஸ் தினமும் காலை எட்டு மணி முதல் எட்டு பதினைந்துக்குள் 'சுடத் தாங்கல்' முச்சந்தியைக் கடந்து, செய்யாறு நோக்கிச் செல்லும். பஸ் சுடத்தாங்கலை நெருங்கி வரும் போதே டிரைவர் தொடர்ந்து ஹாரன் ஒலி எழுப்புகிறார். அண்மையில் ஒரு தோப்பில் வாசம் செய்யும் குரங்குக் கூட்டம் ஒன்று இவ்வொலியைக் கேட்டு அம்முச்சந்தியில் ஒரு குறிப்பிட்ட இடத்தில், சாலைக்குக் குறுக்காக வந்து சேருகிறது. சிறியவையும், பெரியவையுமாய்ச் சுமார் முப்பது நாற்பது குரங்குகள் வருகின்றன. உடனே பஸ் டிரைவர், ஒவ்வொரு குரங்குக்கும் ஒரு பன், ஒரு வாழைப் பழம் தருகிறார். குரங்குகளும் அவரிடமிருந்து அவைகளை ஒன்றோடொன்று போட்டியிடாமல் ஒன்றன்பின் ஒன்றாக க்யூ வரிசையில் வந்து பெற்றுச் செல்கின்றன.

இதற்காக டிரைவர் பஸ் புறப்படுமுன் பத்து ரூபாய்க்கு இரண்டு பைகள் நிறைய பன்னும், பழமும் வாங்கி வைத்துக் கொள்கிறார்!

— எம். எஸ். ராகவன்





''உன் அந்தரங்கக் கடிதங்களையெல்லாம் உன் அண்ணன் படித்துவிடமாட்டாரா ?''

''அதுதான் முடியாது. எல்லாக் கடிதங்களையும் அவன் காலேஜ் புத்தகங்களுக்குள் மறைச்சு வைச்சுடுவேன்!'' -தோ

---

ளோர்கள் பார்த்து முடிவு செய்யும் எவனோடும் அன்பாக வாழ முடியும் என்று நம்பினாள்.

சம்பத்தினுடைய நட்பு அவளுக்குப் பிடித்திருந்தது; தேவையாகவும் இருந்தது. சில வேளைகளில் அவனுடைய பார்வையிலும், பேச்சிலும் ஏற்பட்ட குழைவையும், தாபத்தையும் அவள் உணர்ந்தபோது, அதைப் புறக்கணிக்கவும் முடியாமல் ஏற்கவும் முடியாமல் தவித்தாள். அவன் மீது அவளுக்கு அன்பு உண்டு. அக்கறை உண்டு. அதற்கு மேல் வேறு எதையும் அவளிடம் அவன் எதிர்பார்ப்பதை அவள் விரும்பவில்லை. ஆனாலும் சில வேளைகளில் அவன் காட்டும் அன்பும் பரிவும் அவள் மனத்தில் குறுகுறுப்பை ஏற்படுத்தி விடுவதும் உண்டு.

ஓரக்கண்ணால் அவனைப் பார்த்தாள் நளினி. அவன் ரவா தோசையைச் சாப்பிடுவதில் லயித்திருந்தான். அவனுடைய நெற்றியில் தலை முடி கலைந்து புரண்டு கொண்டிருந்தது. அதை ஒதுக்கிவிட வேண்டும் என்னும் குறுகுறுப்பு அவளுக்குத் தோன்றியது.

சாப்பிட்டு முடிந்ததும் மூக்கான்டி ஐயர், பில்லோடு வந்தார். அவருக்குத் தெரியும், யாரிடம் பில்லைக் கொடுக்க வேண்டும் என்று. மெதுவாக நளினியின் பக்கத்தில் வந்து பில்லை வைத்தார். நளினி, பர்ஸைத் திறந்து பணத்தைக் கொடுத்தாள். சம்பத் பரபரப்புடன் தன் பர்ஸை எடுத்தான்.

''நான் கொடுத்துவிட்டேன்'' என்றாள் நளினி, சிரித்துக் கொண்டே. சம்பத், பர்ஸைப் பைக்குள் போட்டபடியே சொன்னான்:

''நீதான் தினமும் என்னை உபசரிக்கிறாய். உன்னை உபசரித்து விருந்து நடத்த வேண்டும் என்று எனக்கு ஆசை.''

''ஒருநாள் அதற்கு ஏற்பாடு செய்துவிட்டால் போகிறது'' என்றாள், நளினி சிரித்துக் கொண்டே. அவள் சிரித்தபோது கவர்ச்சியாக இருந்தாள். அந்தக் கவர்ச்சியை ரசித்தான் சம்பத்.

இருவரும் பேசிக் கொண்டே நீதிமன்றத்தை நோக்கி நடந்த போது, ஒரு திருப்பத்தில் கருணாகரனின் காருக்குள் கருணாகரனும், பஞ்சாயத்துப் போர்டு தலைவரும் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

''நளினி...! உன்னுடைய டிபன் காரியரை உங்கள் ஆபீஸ் கிளார்க்கிடம் கொடுத்திருக்கிறேன்'' என்றார் கருணாகரன்.

''உங்களிடம் எப்படி டிபன் காரியர் வந்தது?'' — வியப்புடன் கேட்டாள் நளினி.

''உன் அப்பாதான் கொண்டு வந்தார். வழியில் சிறு விபத்து!''

''ஐயோ....'' — நளினி பதறினாள்.

''பயமில்லை. சிறு விபத்துதான். வண்டி மீது கார் இலேசாக இடித்துவிட்டது. நான் அந்த வழியாகப் போனேன். டிபன் காரியரை நான் வாங்கி வந்தேன்.''

''யாருக்கும் அடி இல்லையே?'' — பதற்றத்தோடு கேட்டாள் நளினி.

''நோ நோ, நத்திங்.... மாட்டு வண்டியை ஓட்டி வந்த பையனுக்கு மட்டும் சிறு காயம். அவ்வளவுதான் பயப்பட ஒன்றுமில்லை.''

''அப்பா எங்கே ?''

''இப்போது போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிருப்பார், வாக்குமூலம் கொடுக்க.''

''போன் பண்ணிக் கேட்டுக் கொள்கிறேன்'' என்று கூறிவிட்டு வக்கீல் சங்கத்தை நோக்கி விரைந்தாள் நளினி. அவளைத் தொடர்ந்து சம்பத்தும் சென்றான். வக்கீல் சங்கத்து பேசன் மூலமாகப் போலீஸ் ஸ்டேஷனுடன் தொடர்பு கொண்டாள். ராகவன் அங்கிருந்து காயம் அடைந்தவனைப் பார்க்க ஆஸ்பத்திரிக்குப் போய்விட்டதாகத் தகவல் கிடைக்கவே, ஆஸ்பத்திரிக்குப் போன் செய்தாள்.

''ஆபத்து ஒன்றுமில்லை. முதுகு எலும்பில் அடி. கை எலும்பும் முறிந்திருக்கிறது. வேறு ஒன்றுமில்லை'' என்றார் ராகவன்.

நளினி நிம்மதியாகப் பெருமூச்சு விட்டாள்.

''நளினி! நான் அடிபட்டவனுடைய ஆஸ்பத்திரிச் செலவுக்குப் பணம் கொடுத்தேன். அவனுடைய அப்பா வாங்க மறுக்கிறாரே! வக்கீலிடம் கேட்காமல் வாங்க முடியாது என்கிறார். யாரோ ஒரு வக்கீல் சொன்னாராம். விபத்து நடந்த இடத்தில் கருணாகரன் தான் இருந்தார்'' என்றார் ராகவன்.

''சொன்னாலும் சொல்லியிருப்பார்!'' என்றாள் நளினி.

''சாப்பாடு வந்து சேர்ந்ததா ?''

''அதற்கு முன்பே நான் கஸ்தூரி ஹோட்டலில் சாப்பிட்டு விட்டேன். அப்பா, இன்றைக்கு மத்தியானமும் கேஸ் இருக்கிறது. வீட்டுக்கு வர நேரமாகும். வரும்போது உங்களுக்குக் கஸ்தூரி ஹோட்டல் பாதாம் அல்வா வாங்கி வருகிறேன்'' என்றாள், நளினி. போனின் மறு பக்கத்தில் ராகவன் சிரிப்பது கேட்டது. நளினி போனைக் கீழே வைத்து விட்டுத் தலை நிமிர்ந்த போது, ''ஆபத்து ஒன்றுமில்லையே?'' என்று கேட்டான் சம்பத்.

''இல்லை..... விபத்து நடந்த இடத்தில் கருணாகரன் ஏதோ சதி பண்ணியிருக்கிறார்'' என்றாள் நளினி.

''என்ன?''

''யாரும் பணம் கொடுத்தால் வாங்க வேண்டாம் என்று அடிபட்டவனின் உறவினரிடம் சொல்லியிருப்பார் போலிருக்கிறது.''

''நிச்சயமாகச் சொல்லியிருப்பார். நஷ்டஈடு கேட்டு வழக்குத் தொடர யோசனை கூறியிருப்பார். தெருவில் எங்கே விபத்து நடக்கிறது என்று காத்துக்கொண்டிருப்பவர்களிலே ஒருவர்தான் இந்தக் கருணாகரனும்....'' என்றான் சம்பத் முகத்தைச் சுளித்துக் கொண்டு.

நளினி கைக்கடிகாரத்தைப் பார்த்தாள். இரண்டு மணி. இருவரும் நீதிமன்றத்தை நோக்கி விரைந்தனர். (தொடரும்)

# மாறிய உடை மாறாத உள்ளம்!

பத்மாசனிக்கு ஒரு பெரிய தர்மசங்கடமான நிலை. அவள் எதிரே ஆண்மையும் பெண்மையும் இணைந்து மெருகுற எடுப்பான ஆண் உடையில் ஒரு நபர் அமர்ந்திருந்தார். 'அவர் ஆணா, பெண்ணா?' என்பதை அறிந்து கூற வேண்டும் என்பது காவல் துறையினர் இட்ட பணி. அவர்களே கண்டுபிடித்திருக்க முடியாதா? முடியும்! ஆனால் அவர்கள் சோதனையில் அந்த நபர் ஆண் பிள்ளையாக இல்லாமல் பெண் பிள்ளையாக இருந்துவிட்டால், பல சிக்கல்கள் ஏற்பட்டு அவர்களுக்கே சோதனையாக முடிந்துவிடக் கூடும். அதே போலத்தானே பெண் வார்டர் பத்மாசனிக்கும்? இளைஞன் உண்மையாக இளைஞனாக இருந்துவிட்டால்.....? தங்களைப் பாதுகாத்துக் கொள்ள அவர்கள் நைசாக இப்படித் தள்ளிவிட்டார்கள்! ஆனால் பத்மாசனி! ஓர் அறையில் இரத்த வெறி பிடித்த பெண் புலி; இன்னோர் அறையில் எழிலில் சிறந்த ஓர் இளம் பெண்! இப்படி அடைத்தபின், காதலனின் கண்களைக் கட்டி, இரண்டினுள் ஓர் அறையைத் தேர்ந்தெடுத்துக் கொள் என்று கூறியதாக ஒரு கதை உண்டே! அது போன்ற தர்மசங்கடத்தில் பத்மாசனி வெலவெலத்துப் போனாள். 'எதற்கடா காவல் துறையில் பெண் வார்டர் தொழிலுக்கு வந்தோம்?' என்று எண்ணி மாய்ந்து போனாள்.

உத்தியோகம் ஏற்ற போது ஆண்களுக்குப் பெண்கள் சளைவில்லை என்ற வீறுப்போடு பொறுப்பேற்றவள்தான் பத்மாசனி. இன்று ஓர் ஆண் மகனுக்கு எதிரே தலைகுனிந்து அமர்ந்திருந்தாள். என்ன இசைகேடான சோதனை! நாக்கு அண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. உதடுகள் ஊசி கொண்டு தைத்தாற்போல மூடிக் கொண்டன.

புரியாப் புதிரைப் புதிர் அவிழ்க்க முடியாமல் அவள் தவித்துக் கொண்டிருந்த பொழுது ஒரு சிரிப்பொலி கேட்டது.

இது ஆணின் சிரிப்பா? சிரிப்பொலியைக் கொண்டு கண்டுபிடித்துவிடலாமே! இப்படி எண்ணி அவள் தலை நிமிர்ந்த பொழுது, இளைஞனின் மோகனப் புன்னகை அவளை மீண்டும் தலையைத் தூக்கவொட்டாமல் குனியச் செய்துவிட்டது.

* * *

"சகோதரி! உங்கள் தர்மசங்கடம் விளங்குகிறது. 'எந்தக் கதையைச் சொல்ல?

செய்தியில் விளைந்த சிறுகதை



பிறந்த கதையையா? வளர்ந்த கதையையா?' என்று வாழ்க்கையில் அலுப்புற்றுச் சிலர் விரக்தியாகக் கேட்பதுண்டு. என்னைப் பொறுத்த வரையில் வாழ்க்கையில் அலுக்க வில்லை. சொல்லப் போனால் நான் இனிமே வாழ்வை நுகர வேண்டியவன். இந்த 'வன்' விகுதியைக் கொண்டு என்னை ஆண் பிள்ளை என்று நினைத்தால் அது தவறாக முடியும். பழக்க தோஷத்தால் வந்துவிட்டது இந்த 'வன்' விகுதி. சந்தேகத்துக்கு ஆளானபின் இனியும் தர்மசங்கடத்தில் உழல வைப்பது உசிதம் இல்லை. எனவே, பெண்ணாகப் பிறந்து ஆணாக வளர்ந்த கதையை நடந்தது நடந்த படி ஒளிவு மறைவின்றிக் கூறி விடுகிறேன்.''

இளைஞன் இப்படிக் கூறியும் பத்மாசனிக் குத் தலை நிமிரத் துணிவு ஏற்படவில்லை.

''ஐந்து பெண்கள் பிறந்துவிட்டால் அரசனும் ஆண்டியாவான் என்ற முது மொழிக்கு என் பெற்றோர் அஞ்சவில்லை. ஐந்தும் பெண்ணாகப் பிறந்துவிட்டனவே என் றும் கவலைப்படவில்லை. ஆறுவதாவது பிள்ளை யாகப் பிறக்கக் கூடாதா என்றே ஆசைப் பட்டனர். இந்தத் தடவை பிறக்கப் போவது ஆண் என்ற உறுதியுடன் என் தாயும் தந்தையும் சுற்றாத ஊர் இல்லை; வேண்டாத தெய்வம் இல்லை. அத்தனையையும் மீறி நான் பெண்ணாகப் பிறந்துவிட்டேன். அவர்களுக் கு ஏமாற்றம் ஏற்பட்டு விட்டது.

''பிறந்த குழந்தையின் அழுகையைக் கொண்டே, தாய் உள்ளம் குழந்தை ஆணா, பெண்ணா என்பதைக் கணக்கிட்டுவிடுமாம். பெண்ணாகப் பிறந்தாலும், என் அழுகுரலில் ஆண்மைக் குணத்தைக் கண்ட என் தாயா ருக்கு ஒரு யோசனை தோன்றியிருக்கிறது. தான் பெற்ற பெண்ணையே ஆணாக வளர்த்து விட்டால்.....? தந்தையிடம் கேட்டிருக் கிறாள். ஏமாற்றத்தைத் தவிர்க்க அவரும் அதை ஏற்றிருக்கிறார். ஆண் குழந்தைகளையே பெற்றவர்கள் தங்கள் பெண் குழந்தைப் பாசத்தைக் காட்ட 'அம்மா' போட்டு அழைப்பதும் பெண் குழந்தைகளையே பெற்றவர்கள் தங்கள் ஆண் குழந்தைப் பாசத் தைக் காட்ட 'அப்பா' என்று அழைப்பதும் உலகில் காணும் இயல்புதானே? ஆண்–பெண் இருவருக்கும் பொதுவான 'செல்வம்' என்ற பெயரை வைத்துச் 'செல்லப்பா' என்று செல்லமாக அழைக்கலாயினர்.

''இதுகூட விசித்திரம் இல்லை. பெண் ணாகப் பிறந்து வளர்ந்த எனக்குச் சோழி, பாண்டி, பல்லாங்குழி போன்ற ஆட்டங் களில் அல்லவா நாட்டம் செல்ல வேண்டும்? விளையாட்டுக்காவது சாதம் சமைத்து, கறி நறுக்கிப் பரிமாறத் தெரிய வேண்டாமோ? நான் பந்து, கிரிக்கெட், கோலி போன்ற ஆட்டங்களில்தான் அதிக ஆர்வம் காட்டி னேன். அதோடு ஆண் பிள்ளைகளைப் போல்



அதிகாரம் செலுத்திச் சாப்பிடத்தான் கற்றிருந்தேன். நீந்தித் தவழ்ந்து தளர் நடை பயின்ற காலத்தில் படு கம்பீரமாகப் பார்ப்பேனாம்! ஆண் குழந்தைகள்கூடப் பிச்சை வாங்குகிறாற் போல் இருக்குமாம்.

''அது போகட்டும். பெண் குழந்தையான எனக்கு ஃப்ராக், பாவாடை என்று போட்டுக் கொள்ள அல்லவா ஆசை ஏற்பட்டிருக்க வேண்டும்? நிஜாரையும் சட்டையையும்தான் கையிலே தூக்கிக் கொண்டு திரிவேனாம்.

''இன்னொரு வேடிக்கையைக் கேட்டால் நீங்கள் சிரிப்பீர்கள். எங்கள் பக்கத்து வீட்டிலே ஒரு பையன், மஞ்சுநாதன் என்று! என்னைக் காட்டிலும் இரண்டு வயசு பெரியவன். அவனும் நானும் அகமுடையான் பெண்டாட்டி விளையாட்டு விளையாடினோமாம். அகமுடையான் யாரு? நான்! பெண்டாட்டி அவன். என் அதிகாரம் தான் பறந்தது! அதைக் கண்டு அம்மா அயர்ந்து போய்விட்டாள்; அப்பா அகமகிழ்ந்து போய் விட்டார்.

''இந்த நாடகம் நாங்கள் படித்து வந்த பள்ளியிலும் தொடர்ந்தது. ஆம், பள்ளி நாடகங்களில் எனக்கு ஆண் வேஷம், அவனுக்குப் பெண் வேஷம். அவன் கண் வீச்சில், ஒய்யார நடையில் சொக்காதவர்கள் இடையாது. பெண்களே பிச்சை வாங்க வேண்டிய அளவுக்கு அவன் படுகட்டியாக விளங்கினான். அவனுக்கு இணையாக நடித்த நானோ என் வெடுக்குப் பேச்சினால் அவனைத் திணற அடித்தேன். எங்கள் நடிப்பைக் கண்டு நாடகக் கொட்டகையே அதிரும் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

''ஆனால் எங்கள் நாடகத்தைக் கண்டு என் அப்பா – அம்மா போட்ட திட்டம்தான் படு பயங்கரம்! என்னை ஆண் பிள்ளையாகவே வளர்க்கத் திட்டமிட்டார்கள். தங்கள் பிள்ளையில்லாக் குறையைத் தீர்த்துக் கொள்ள வேண்டி மாநிலத்தை விட்டு மாநிலத்துக்குமே மாற்றிக் கொண்டார்கள்.

''எனக்குக் கிராப் வெட்டி, ஆண் உடை அணிவித்து, ஆண்கள் கல்விக்கூடத்திலேயே படிக்க வைத்தார்கள். பெண் என்ற நினைவே எனக்கு வாராமற் செய்ய எத்தனையோ பாடு பட்டார்கள். ஆயினும் வயது ஏற ஏற என் உள்ளம் என்னை எச்சரித்தது. எனவே, ஆண் பிள்ளைகளோடு பழகுவதில் ஒதுக்கம் காட்டவே முயன்றேன்.

''கல்லூரிகளுக்கிடையே நிகழ்ந்த ஒரு பேச்சுப் போட்டியில் ஒரு பெண் எனக்கு அறிமுகமானாள். பெயர் மஞ்சு. என இனத்தைச் சேர்ந்தவள் என்ற எண்ணம் என்னை எப்படியோ அவளோடு நெருங்கி உறவாட விட்டது. அந்த நெருக்கத்துக்கு அவள் வேறு பொருள் கற்பித்துக் கொண்டாள். ஒரு நாள் கல்லூரி மாணவிக்குரிய துணிச்சலுடன் என்னிடம் கேட்டும் விட்டாள்: 'என்னைத் திருமணம் செய்து கொள்வீர்களா?'

''மூன்றுமுறைக் கவ்விய பாம்பின் கதையாகி விட்டது என் நிலை. சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் தவித்தேன். என் மௌனத்தைச் சம்மதமெனத் தீர்மானித்து அவள் தன் பெற்றோரைச் சம்பந்தம் பேச என் வீட்டுக்கு அனுப்பி வைத்தாள்.

''அப்பொழுது என் பெற்றோர் விழித்தனர்; விழித்தும் கொண்டனர். 'இவளைப் பிள்ளையாக வளர்த்தோமே! இவளுக்குச் சம்பந்தம் பேச வந்துவிட்டார்களே! இவளுக்கு இப்பொழுது திருமணம் செய்து வைக்க என்ன செய்வது? நம் விளையாட்டு இப்படி வினையாகி விட்டதே!' என்று வருந்தினர்.

''அப்பொழுதுதான் நான் முரண்டு பிடித்தேன், நான் இனிமேல் பெண்ணாக மாற முடியாது என்று!

'' 'காரணம்?'

'' 'சொல்ல முடியாது!'

'' 'என்ன செல்லம்! பைத்தியம் பிடித்து விட்டதா உனக்கு? ஒரு பெண் ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள முடியுமா?'

'' 'முடியாது தான்! அதனால்தான் ஆணாகவே இருக்கிறேன் என்று சொல்கிறேன். எனக்குக் கல்யாணமே வேண்டாம்!'

'' 'மஞ்சுவின் பெற்றோருக்கு என்ன பதில் சொல்வது?' அம்மா கதிகலங்கினாள். என் மனத்தில் ஒரு புயல் உருவாகவே, சொல்லாமல் கொள்ளாமல் நான் இங்கே வந்து விட்டேன்.''

''?.......!''

''என்ன விழிக்கிறீர்கள்? இந்த முற்றி விட்ட பைத்தியம் எங்கிருந்து வந்தது என்றுதானே? மஞ்சுவைத் தேடி வந்திருக்கிறது!– அட, காலிங்பெல்லில் கை வைக்கிறீர்களே! மன நோய் மருத்துவ மனைக்கு அனுப்பவா?–

**VOLTAS**

வாரி வழங்கும்
குளுமை வள்ளல்

# காஸ்மோபாலிடன் அதிநவீன 1.5 டன் ரூம் ஏர்கண்டிஷனர்

மிகச் சிறந்த குளுமை தருவதோடு
இந்த வகையிலேயே மிகச் சிறந்த
செயலாற்றும் காஸ்மோபாலிடன்...
இதன் இதர தன்னிகரற்ற
சிறப்பம்சங்கள் இதோ :



- ☐ அதிக தூரம் குளுமையூட்டும்.
- ☐ மிகப் பரந்த இடத்திற்கு குளுமையூட்டும். தானே திறந்து கொள்ளும் ':ப்ளிப்-டாப்', அதிவிரைவில் சீரான குளுமை பரப்ப உதவும்.
- ☐ 'தொட்டவுடன் இயங்கும்'— அத்தனை வேகம்.
- ☐ 1.5 டன் முழுமையான குளுமை, ஆயின் மின்சக்திச் செலவோ சிக்கனம்.




**வோல்டாஸ் லிமிடெட்,**
116, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1.

உங்கள் வட்டாரத்திலுள்ள எங்கள் அங்கீகாரம் பெற்ற வியாபாரிகளை அணுகுக அல்லது அருகிலுள்ள வோல்டாஸ் அலுவலகத்தை நாடுக.

**வழங்குவோர் வோல்டாஸ்:**
**குளுமை தருவதையே**
**குறிக்கோளாகக் கொண்டவர்கள்**

CMVAC-60-182-TAM

முழுவதையும் கேட்டுவிட்டு முடிவு எடுங்கள்! வேலூரில் நாங்கள் இருந்த வீட்டுக்கு அடுத்த வீட்டில் மஞ்சுநாதன்னு ஒரு பையன். அவன்தான் அந்தநாளில் என்னோடு நாடகமாடியவன். அவனைத் தேடித்தான் இவ்வளவு தூரம் வந்திருக்கிறேன். என் அப்பா—அம்மா என்னை ஆண் பிள்ளையாக வளர்த்தது இந்த நாளில் ஒரு விதத்தில் நன்கு உதவியிருக்கிறது. இந்த ஆண் பிள்ளை வேஷத்திலுலே தவறான கருத்தோடு பிற ஆண் பிள்ளைகள் என்னைப் பார்க்க முடியவில்லை. நீங்களும் ஒரு பெண் ஆனதினுலே சொல்கிறேன். ஒரு பெண் ஒருவனிடம் மனத்தைப் பறி கொடுத்துவிட்டால் இன்னொருவனை ஏற்பாளா? என் வாழ்க்கையில் குறுக்கிட்ட அந்தப் பெண் மஞ்சு. இந்த மஞ்சுநாதனைத் தேடி இவ்வளவு தூரம் ஓடி வரச் செய்துவிட்டான். அவன் இவ்வூரில் வேலையில் இருக்கிறான் என்றும் இன்னமும் அமெச்சூர் நாடகங்களிலே பெண் வேஷம் போடுகிறான் என்றும் கேள்விப்பட்டு நேற்று இரவு இங்கு நடந்த நாடகம் ஒன்றைப் பார்க்கப் போயிருந்தேன். நாடகம் முடிந்ததும் மேடைக்குப் போய், 'ஹலோ மஞ்சு! என்னைத் தெரிகிறதா? அந்த நாட்களில் நீயும் நானும் பள்ளிக்கூட நாடகங்களில் கணவன் மனைவியாக நடிப்போமே!' என்று ஆரம்பித்தேன்.

" 'யாரைப் பார்த்து இப்படிப் பேசுகிறாய்? மரியாதை கெட்டவனே! இப்படி எத்தனையோ ஆண் பிள்ளைகள், நாடகத்தில் நடிக்கும் பெண்களைப் பார்த்துப் பல்லை இளித்துக் கொண்டு வந்து நிற்கிறார்கள். உங்களைப் போன்றவர்களைப் போலீசில் பிடித்துக் கொடுக்க வேண்டும்!' என்று கத்திவிட்டான் பெண் வேடத்திலிருந்த மஞ்சு.

"அன்றைய நாடகம் காவல் துறையினர் நல நிதிக்காக நடைபெற்றது. நன்றி தெரிவிக்க மேடை ஏறி வந்த இன்ஸ்பெக்டர் இதைக் கேட்டு என்னைப் பிடித்து இழுத்து வந்துவிட்டார். அவரிடமிருந்து தப்ப எனக்கு ஒரு வழியும் தோன்றாமற் போகவே, உண்மையைப் போட்டு உடைத்துவிட்டேன்: 'உண்மையில் நான் ஒரு பெண்தான். எனக்கும் நடிக்கத் தெரியும். என் கண்கள் ஏமாறவில்லை என்றால், இந்த நாடகத்தில் பெண்ணாக நடித்தவன் எனக்குத் தெரிந்த மஞ்சுநாதன்தான். பள்ளி நாட்களில் அவனோடு ஆண் வேடம் போட்ட செல்லத்தை அவனால் மறந்திருக்க முடியாது. மறந்திருந்தால் அது என் துரதிர்ஷ்டம்!' என்றேன். 'என் பேச்சு நிசமா, என் உருவம் நிசமா?' என்பதை அறியத்தான் போலீஸ் என்னை உங்களிடம் அனுப்பியிருக்கிறது!"

பெண் வார்டன் பத்மாசனிக்கு எல்லாம் நறுக்குத் தெறித்தாற்போல் விளங்கிவிட்டன. தைரியமாகத் தலை நிமிர்ந்து பார்த்து, "ஆமாம், நீ டாக்டர் வேலாயுதத்தின் கடைசி மகள்தானே?" என்று கேட்டாள்.

"ஆமாம். நீங்கள்?"

"மஞ்சுநாதனின் சகோதரி! அவனுக்குத் தன் வேஷத்திலே பெரிய இறுமாப்பு. யாராவது ஆண் பிள்ளைகள் இப்படிக் கிட்ட நெருங்கிப் பேசிவிட்டால், இப்படித்தான் கடுக்காய் கொடுப்பான்! உன் ஆண் வேஷத்திலே அவனுக்கு இன்றைக்குக்கூட அலாதி பிரமை! திருமணம் செய்து கொண்டால் உன்னையே திருமணம் செய்து கொள்வது, இல்லாவிட்டால் திருமணமே செய்து கொள்வதில்லை என்று உறுதியாக ஒற்றைக் காலில் நிற்கிறான்! ஆனால் ஒரு சமாசாரம்! திருமணத்தின் பொழுது நீ பெண் வேஷம்தான் போடணும், அவன் ஆண் வேஷம்தான் போடணும்! அப்புறம் உங்களுக்குள்ளே எந்த வேஷம் வேண்டுமானாலும் போட்டுக் கொள்ளுங்கள்!" என்று கூறிக் குறும்பாக நகைத்தாள் பத்மாசனி.

## அன்னை வேளாங்கண்ணி



போர்ச்சுகீசியர்கள் இந்தியாவினைக் கண்டறிய வந்த போது கடும் புயலில் சிக்குண்டார்கள். 'அம்மா, மேரித் தாயே! எங்களைக் காப்பாற்று! கரையேறிய இடத்தில் கோயில் கட்டுகிறோம்!' என்று வேண்டிக் கொண்டனர். அவர்கள் கரையேறிய நாகப்பட்டினத்துக்கருகிலுள்ள வேளாங்கண்ணி ஊரில் எழுந்தது அன்னை வேளாங்கண்ணி கோயில்!

வேளாங்கண்ணி பக்தர் கே.பி.ஜி. பணிக்கர் கூறுகிறார்: "மூன்று வருஷங்கள் உடல் நோயினால் பெரிதும் அல்லலுற்றேன். பல நாட்கள் சிகிச்சையும் பலனளிக்காமல் போய்ச் சாவு என்னை நெருங்கிக் கொண்டிருந்தது. ஒருநாள் இரவு அன்னை வேளாங்கண்ணி எதிர்ப்பட்டு 'உனது வியாதியிலிருந்து மீளுவாய். என்னை வந்து பார். சமூகத்துக்கு நீ ஆற்ற வேண்டிய சேவை இருக்கிறது' என்று கூறுவதுபோல் ஒரு தோற்றம் உண்டாயிற்று. மூன்று நாட்களில் நான் உடல் தேறி எழுந்தேன். அன்னையின் கோயிலுக்குச் சென்றேன். அங்கு மதலைகள் பிரார்த்தனை புரிவதைக் கண்டதும் குழந்தைகளுக்கு ஏதாவது நல்ல காரியம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது. என் கையில் பத்தாயிரம் ரூபாயே இருந்தது. அதை வைத்து என்ன செய்வது? கேரளக் கடற்கரையில் இருந்த என் சொந்த நிலத்தைத் திருப்பதி தேவஸ்தானத்தினர் இரண்டு லட்சம் ரூபாய்க்கு வாங்கிக் கொண்டனர். இந்தப் பணத்தையும் கொண்டு மாம்பலத்தில் அன்னை வேளாங்கண்ணி பள்ளி நடத்தி வருகிறேன்!" பரம்பொருளின் திருவிளையாடல்களை என்னென்பது!

அன்னை வேளாங்கண்ணி திருநாள் நாகப்பட்டினத்துக்கருகிலுள்ள வேளாங்கண்ணி ஊரில் மிகச் சிறப்பாக ஆண்டுதோறும் நடைபெறுகிறது. செப்டம்பர் 7ந் தேதி தேர்த் திருவிழா; எட்டாந் தேதி வேளாங்கண்ணி விழா நிறைவுறுகிறது.

மேலட்டை: வேளாங்கண்ணி மாதா வண்ணப் படம்: தராலிங்கம்
மாதாவை வணங்கும் பெண்மணி வண்ணப் படம்: உத்தரா

முன்பெல்லாம் (அதாவது நாற்பது ஐம்பது வருடங்களுக்கு முன்) இன்றைக்கு இருக்கும் அளவுக்குப் பசப்பும், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் தன்மையும் இல்லை என்று ஒரு பெரியவர் என்னிடம் ஒரு நாள் சொன்னார். அவர் பெரியவர்; உண்மையாகத்தான் இருக்கும்.




# 'நீ என்னைப் புகழ்; நான் உன்னைப் புகழ்ந்து விடுகிறேன்!'

மேற்சொன்ன தன்மைகள் ஒரு குறிப்பிட்ட காலத்துக்கோ, தேசத்துக்கோ அல்லது சமூகத்துக்கோ பிரத்தியேகமாக ஏற்படுவன அல்ல. மனிதனுடைய மற்ற குண விசேஷங்களைப் போல இந்தத் தன்மைகளும் ஒரு விசேஷம்தான். ஆனால் இப்போது இதை நாம் ஒரு சாதுரியத்துடன் ஒரு கலை அழகுடன் கையாள்கிறோம். மனத்தின் உள்ளே என்ன எண்ணங்கள்தான் இருக்கட்டுமே, அவை உள்ளேயே இருக்கும். வெளியே வரும் வார்த்தைகள் உதட்டிலிருந்து புறப்பட்டுக் காற்றில் கலக்கும் ஒலி அலைகள்தாம்.

இக்ரே. நானேயோ என்றிருப்பவரைப் பார்த்து. 'ஜம்மென்று எழுந்து நடமாட ஆரம்பித்து விடுவீர்கள்' என்பது: ஒரு நாட்டிய அரங்கேற்றத்தை 'ஓகோ' என்பது, ஒன்றரை வயதுக் குழந்தையின் மழலைக்குப் பாமாலை சூட்டுவது. துக்கம் விசாரிக்கப் போன இடத்தில் மறைந்தவருக்கு இல்லாத குண அலங்காரங்களைப் பாடுவது இவையெல்லாம் இப்போதைய மனித சமூக தர்மங்களாகிவிட்டன.



இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம், யாருடைய விரோதத்தையும், அதிருப்தியையும் அநாவசியமாகச் சம்பாதித்துக் கொள்ள வேண்டாம் என்பது மட்டுமல்ல. யாரால் எப்போது தமக்கு ஒரு காரியம் நிறைவேற வேண்டியிருக்குமோ ? நாட்டிய அரங்கேற்றம் தண்டச் செலவு என்று மனத்தில் பட்டதைச் சொல்லிவிட்டால் ? பெண்ணைத் தூளியிலிருந்து மேடைக்கு விரட்டிய தந்தை ஒரு பெரிய கம்பெனியின் டைரக்டராகவோ, ஓர் ஐ. ஏ. எஸ். அதிகாரியாகவோ இருந்து விட்டால், (இப்படிப்பட்டவர்களுடைய கொடுக்குகள்தான் தாம் தூமென்று நாட்டியம் ஆடுகின்றன.) அவ்வளவுதான், ஒரு வேலை கிடைக்காது, ஒரு கண்ட்ராக்ட் கிடைக்காது.

''நான் உன்னைப் புகழ்கிறேன். நீ என்னைப் புகழ்ந்துவிடு.''

பி. வி. ஆர்

இது ஒருவருக்கொருவர் எழுதிக் கொள்ளாத ஒப்பந்தம். சமீபத்தில் இரு வித்துவான்களுக்கிடையே கீழ்க்கண்ட சம்பாஷணையைக் கேட்டேன்.

''அண்ணா, நீங்க கல்யாணியில் பஞ்சமத்தில் அப்படி நின்னபோது எனக்கு மெய் சிலிர்த்துப் போச்சு.... ஆஹா, வரப்பிரசாதம்!''

'' உங்க தோடிக்கும் பைரவிக்கும் முன்னாடி நான் எங்கே ஸார் ? இணையற்றத் தவனே. உங்களுக்கு அமையற மாதிரி சுருதி அமைய நான் இமாலயத்துக்குத்தான் தவம் பண்ணப் போகணும் !''

இரண்டு பேரும் பிழைக்கத் தெரிந்தவர்கள்.... என்னமோ, கல்யாணியும் தோடியும் பைரவியும் இவர்களுக்காகத்தான் பிறந்தன போன்ற நினைப்பு. இவர்கள் இருவரும் ஒருவரைப் பற்றி ஒருவர் என்னிடம் தனியாக என்னவெல்லாம் பேசியிருக்கிறார்கள் என்பதையெல்லாம் வெளியே சொன்னால், அவ்வளவுதான்....! இரண்டு பேரும் சேர்ந்து ஸ்வரம் பாட ஆரம்பித்து விடுவார்கள்!

சிலர், பிறர் என்ன செய்தாலும் என்ன சொன்னாலும் அதுதான் சரி, அதுதான் சிறந்தது என்று வாய் கூசாமல் கூறுவார்கள். தப்பாகக்கூறிவிட்டோமோ, தப்பாகச் செய்துவிட்டோமோ என்று உள்ளூற நினைக்கிறவர்கள்கூட, சிற்சில சமயங்களில், இம்மாதிரிப் புகழ் வார்த்தைகளில் மயங்கிப் போகிறார்கள். ஒரு வேளை, தாம் சொன்னதும், செய்ததும் சரிதானோ என்ற மயக்கமே ஏற்பட்டுவிடுகிறது.

உள்ளத்தில் உள்ளதை உள்ளபடி கூறத் திராணியற்று நம் எல்லோருடைய மனங்களுமே நாகரிகம் என்ற சிறையில் அடைபட்டுக் கிடக்கிறது.



அன்றைய காலைத் தினசரியைப் பார்த்துக் கொண்டிருந்த கனகசபை திடுமென்று ஒரு முடிவுக்கு வந்தார். அதன்படியே, ஆபீசுக்குப் போனதும், முதல் காரியமாகத் தமது அக்கவுண்டெண்டைக் கூப்பிட்டார்.

''இந்தக் கறுப்புப் பண வேட்டை நடத்துகிறார்களே வருமான வரி அதிகாரிகள், அவர்களுக்கு ஓர் இடத்தில் கறுப்புப் பணம் இருக்கிறது என்று எப்படித் தெரிகிறது?'' என்று கேட்டார்.

'' விஷயம் தெரிந்தவர்கள் யாராவது தகவல் கொடுப்பார்கள். சில சமயம், வருமான வரிக்காரர்களே சில புள்ளிகள் மீது கண் வைத்திருப்பதும் உண்டு....''

''தகவல் கொடுப்பது என்றால் எப்படி?''

''வெறும் மொட்டைக் கடுதாசு போட்டால்கூடப் போதும்... அதிகாரிகள் விழுந்தடித்துக் கொண்டு ஓடுவார்கள்!''

''மொட்டைக் கடிதமாக இல்லாமல் முழு விலாசத்துடன் கடிதம் எழுதினால்...?''

''அதற்கும் பலன் நிச்சயம் கிடைக்கும்!''

கனகசபை ஒரு பெரும் பணக்காரர் — தப்பு, தப்பு — கறும்.பணக்காரர் அவர். நிறைய மில்களும், எஸ்டேட்டுகளும் உண்டு. எக்கச்சக்கமான வருமானம் வந்தது அவருக்கு. அதில் முக்கால்வாசியைக் கறுப்பாக்கி, வீட்டிலேயே பல இடங்களில் பதுக்கி வைத்திருந்தார். இத்தனை நாட்களாகக் கறுப்புப் பணம் பற்றியே மூச்சு விடாமல் இருந்தவர் தான் அன்று திடுமென்று அப்படி ஒரு தீர்மானம் செய்தார். அதாவது, உடனடியாக, வருமான வரி அதிகாரிகளுக்கு ஒரு மொட்டையில்லாத கடிதம் — தமது லெட்டர்ஹெட்டிலேயே — எழுதிப் போட்டார், தம்மிடம் உள்ள கறுப்புப் பணம் பற்றி!

இரண்டு நாட்கள் பொறுத்துப் பார்த்தார். மூன்றாம் நாள் வீட்டுக்கு வந்ததும், ''யாராவது வந்தார்களா ?'' என்று மனைவியிடம் விசாரித்தார்.

''யாரும் வரவில்லையே !''

''சரி, நாளைக்கு வருகிறார்களோ, என்னவோ! எதற்கும் நான் இல்லாத போது யாராவது வந்தார்களானால் வீடு முழுவதும் நன்றாகச் சோதனை போட்டுப் பார்க்கச் சொல் !'' என்றார்.

மறுநாளும் யாரும் வரவில்லை. 'வேறு வேலையில் பிஸியாக இருக்கிறார்களோ என்னவோ?' என்று தமக்குத் தாமே சமாதானம் சொல்லிக் கொண்டு, ஒரு வாரம் வரையில் பொறுத்துப் பார்த்தார். யாரும் வரக் காணோம்.

மீண்டும் இன்னொரு கடிதம் எழுதினார்.. அதில் சற்று விரிவாகவே தம் வீட்டில் எங்கெங்கே எவ்வளவு கறுப்புப் பணம் இருக்கிறது என்று குறிப்பிட்டு எழுதினார். பிறகு, முன்னைப் போலவே, 'யாராவது வரமாட்டார்களா' என்று காத்துக் கிடந்தார். ஆனால் என்ன ஏமாற்றம் போங்கள்-வருமான வரி அதிகாரிகள் அவரை லட்சியம் செய்யவில்லை !

காத்துக் கிடந்து அலுத்துப் போன கனகசபை, வருமான வரி இலாகாவுக்கே போன் பண்ணினார்.

''நான்தான் கனகசபை பேசறேன்....என் வீட்டிலே கறுப்புப் பணம் நிறைய இருக்கிறது. வந்துஎடுத்துக் கொண்டுபோங்கள்!''என்றார்.



"நீங்கள் எங்கேயிருந்து பேசுகிறீர்கள்?"

"கீழ்ப்பாக்கத்தில் — என் ஆபீசிலிருந்து... வீட்டிலேதான் கறுப்புப் பணம் இருக்கிறது... இங்கே இல்லை !"

"ஓகோ ! கீழ்ப்பாக்கமா! சரிதான் !" என்ற அதிகாரி, சட்டென்று போனைக் கீழே வைத்து விட்டார்.

கனகசபைக்குக் கோபம் வந்துவிட்டது. மீண்டும் போனில் அந்த அதிகாரியை அழைத்து, "என்ன ஐயா! பாதியிலே போனை வைத்துவிட்டீர்களே! நான் சொல்வதைக் காதிலே வாங்கிக் கொள்ளவில்லையே..... பேசுகிற நான் மனிதனாகப் படவில்லையா உங்களுக்கு?"என்று சத்தமிட்டார்.

"கீழ்ப்பாக்கம் என்று சொன்னீர்கள்.... 'கறுப்புப் பணம் இருக்கிறது, எடுத்துக் கொண்டு போங்கள்' என்றீர்கள்..... அதனாலே....."

"நான் பைத்தியக்காரன் என்று முடிவு கட்டி விட்டீர்களாக்கும்!.... என்னய்யா — இது பேத்தல்!"

"பேத்தல்தான் சார்! ஒரு பைத்தியக்காரனைத் தவிர வேறு யார் இப்படி எங்களுக்குப் போன் பண்ணப் போகிறார்கள் ?"

"நான் சீரியஸாகத்தான் சொல்கிறேன். நீங்கள் வந்து பாருங்கள்.... அப்புறம் நம்புவீர்கள் !"

"ஆகா! அவசியம் வருகிறேன்! கீழ்ப்பாக்கத்துக்குத்தானே !....."

"இல்லை, தியாகராய நகருக்கு.... என் பங்களா விலாசம் 99, வினைவிதைத்தமுதலித் தெரு..... !"

"தாங்க்யூ.....!"

கனகசபை ரொம்ப ஆவலுடன் காத்திருந்தார். ஆனால் இம்முறையும் ஏமாற்றம்தான் கிட்டியது. மீண்டும் போன் பண்ணினார். "என்ன சார், வரவே இல்லையே?" என்று குறைப்பட்டுக் கொண்டார்.

"எதற்காக சார், என் உயிரை வாங்குகிறீர்கள் ?" என்று அலுத்துக் கொண்டார் அந்த அதிகாரி.



"கறுப்புப் பணம் வைத்திருக்கிறேன் சார்! வந்து எடுத்துக் கொண்டு போகக் கசக்கிறதாக்கும் உங்களுக்கு!"

"வராவிட்டால் என்ன பண்ணுவீர்களாம்?"

"உங்கள் மேலதிகாரியிடம் புகார் பண்ணுவேன்.... மரியாதையாக வந்து சேருங்கள்!"

"ஆகட்டும், பார்க்கலாம்!"

சொன்னாரே தவிர அந்த அதிகாரி வரவே இல்லை. கனகசபைக்கு வந்ததே கோபம் ! விடுவிடென்று நேராக வருமான வரி ஆபீசுக்கே போனார். தலைமை அதிகாரியைச் சந்தித்தார்.

"என்ன சார், இது அநியாயம்! லெட்டர் போட்டேன், வரவில்லை. போனில் சொன்னேன், அப்போதும் வரவில்லை.... என்ன இலாகா நடத்துகிறீர்கள், உங்கள் இஷ்டத்துக்கு? ஹூம்!" என்று அதட்டல் போட்டார்.

"மன்னிக்க வேண்டும் மிஸ்டர் கனகசபை. நிஜமாகவே உங்களிடம் கறுப்புப் பணம் இருக்கிறதா என்று சந்தேகம் எங்களுக்கு!"

"நான்தான் சொல்கிறேனே? அப்புறம் என்ன?"

"எவ்வளவு இருக்கும்?"

"எனக்கு எப்படிக் கணக்குத் தெரியும்?... நீங்கள் வந்து கைப்பற்றுங்கள்; கணக்குப் போடுங்கள், எனக்குச் சொல்லுங்கள்!"

"நிறையத் தேறுமோ ?"

"ஓ, எஸ் !"

அதிகாரி கனகசபையை அவநம்பிக்கையுடன் பார்த்தார். "நீங்கள் சொல்வதை இன்னமும் எங்களால் நம்ப முடியவில்லை... அதனால்தான் உங்கள் பேச்சையும் கடிதங்களையும் இங்கே யாரும் லட்சியம் செய்யவே இல்லை.....!"

கனகசபையின் மீசை துடித்தது. "மனிதனை மனிதன் நம்பாத இலாகா ஐயா இது! நான் கறுப்பு என்று சொன்னாலும்கூட, 'இல்லை, வெள்ளைதான்!' என்று கற்பூரத்தை அடித்துச் சத்தியம் பண்ணுவீர்கள் போல் இருக்கிறதே! நான் அழைக்கிறேன், வந்து பாருங்கள், அவ்வளவுதான் சொல்வேன் !"

"சரி, உங்கள் பங்களாவில் கறுப்புப் பணம் கிடைக்கவில்லை என்றால்....?"

"அத்தைக்கு மீசை முளைக்கும்!.... அட, வாங்க சார் என்றால் பிகு பண்ணிக் கொள்கிறீர்களே ?"

"சரி, வருகிறோம் !"

"இந்தத் தடவையும் என்னை ஏமாற்றினால் சும்மா விடமாட்டேன்! ஆ(ம்)மாம்!" என்று மீசையை முறுக்கிக் காண்பித்துவிட்டு வெளியே வந்தார் கனகசபை.

கனகசபை அவநம்பிக்கையுடன்தான் காத்திருந்தார். ஆனால் அவரை ஏமாற்றமடையச் செய்யக் கூடாது என்றோ என்னவோ, மறுநாளே 'திபுதிபு'வென்று பத்துப் பதினைந்து வருமான வரி அதிகாரிகள் வந்து நின்றார்கள். "மிஸ்டர் கனகசபை! உங்கள் வீட்டைச் சோதனை போடப் போகிறோம் !" என்றார்கள்.

"பேஷாகப் போடுங்கள்!"

"உங்கள் பாங்க் கணக்குப் புத்தகங்களை எல்லாம் எங்கே வைத்திருக்கிறீர்கள் ?"



"எப்படியும் பிடிபட்டு நீ இங்கே வந்தே?"
"தங்க பிஸ்கட் வச்சிருந்தேன். எப்படியோ போலீஸ் நாய் மோப்பம் பிடித்து விட்டது."

"என்னோடு வாருங்கள்!" என்று அவர்களை மாடிக்கு அழைத்துச் சென்றார் கனகசபை. அங்கே இருந்த மூன்று பெரிய இரும்புப் பீரோக்களைச் சுட்டிக்காட்டி, "முதலாவதில் பாங்க் கணக்குப் புத்தகங்கள்; இரண்டாவதில் நகைகள்; மூன்றாவதில் பிக்ஸட் டெபாஸிட், ஷேர்கள் பற்றிய தகவல்கள் இருக்கின்றன. பார்த்துக் கொள்ளுங்கள்!" என்று கூறி, இடுப்பிலிருந்து சாவிக் கொத்தையும் எடுத்துக் கொடுத்தார்.

அதிகாரிகள் பீரோக்களைத் திறந்து பார்த்தார்கள். கனகசபை சொன்னபடியே அந்தப் பீரோவில் நகைகளும், இதர அம்சங்களும் இருந்தன. எல்லாவற்றுக்கும் கணக்கு எடுத்துக் கொண்டு புறப்பட்டார்கள்.

"இருங்கள்.... ரூபாய் நோட்டுக்களை எங்கெங்கே பதுக்கி வைத்திருக்கிறேன் என்று நான் சொல்லவே இல்லையே?" என்றார் கனகசபை.

"அது வேறு இருக்கிறதா?"

"ஏராளமாக இருக்கிறது!.... இந்தக் குளியல் அறையில் குளியல் தொட்டிக்குக் கீழே; பக்கத்து அறையில் புத்தர் சிலைக்குப் பின்னால்; அதோ தோட்டத்தில் தெரிகிறதே, ரோஜாப் பாத்தி அதற்கு அடியில் — இப்படி மூன்று இடங்களில் பதுக்கி வைத்திருக்கிறேன்...எடுத்துக் கொள்ளுங்கள்...!"

அவர் குறிப்பிட்ட இடங்களிலெல்லாம் அதிகாரிகள் தேடித் துருவிப் பார்த்து நிறைய ரூபாய் நோட்டுக்களைக் கைப்பற்றினார்கள்; கணக்கு எழுதிக் கொண்டார்கள்.

புறப்படுவதற்கு முன்னால், "ரொம்ப நன்றி மிஸ்டர் கனகசபை.... நீங்களே முன் வந்து உதவி செய்ததை மறக்கமாட்டோம்!" என்றார் பிரதம அதிகாரி.

"இதென்ன சார், பிரமாத உதவி..... ஆமாம், நான் உங்களை ஒன்று கேட்கலாமா?"

"எஸ்?"

"இம்மாதிரி கருப்புப் பணம் குறித்துத் தகவல் கொடுப்பவர்களுக்கு, நீங்கள் கைப்பற்றும் பணத்தில் பத்து சதவிகிதம் அன்பளிப்பாகத் தருகிறீர்கள் அல்லவா?... அதே மாதிரி எனக்கும் கொடுப்பீர்கள் அல்லவா?"

அதிகாரி சற்று யோசித்தார். "ஓ! நிச்சயமாகத் தருவோம்.... அதுவும் நீங்களே முன்வந்து உதவியிருக்கிறீர்களே?" என்றார்.

"அதிருக்கட்டும், நான் உங்களை ஒன்று கேட்கலாமா?"

"கேளுங்களேன்!"

"நீங்கள் ஏன் இப்படி வலிய வந்து எங்களுக்குத் தகவல் கொடுத்தீர்கள்?.... என்ன மர்மம் அடங்கியிருக்கிறது இதிலே?"

"மர்மம் ஒன்றுமில்லை.... 'பொய் சொன்னால்தான் இந்தக் காலத்தில் எல்லோரும் நம்புகிறார்கள். உண்மை சொன்னால் யாருமே நம்புவதில்லை' என்று என் நண்பர் சொன்னார். அதை 'டெஸ்ட்' பண்ணிப் பார்ப்போமே என்றுதான் இப்படிச் செய்தேன்... நீங்கள்தான் ஆரம்பத்திலிருந்து என்னை நம்பவே இல்லையே....! நண்பர் சொன்னது உண்மையாகத்தான் போய்விட்டது, பாருங்கள்!"

வருமான வரி அதிகாரிகள் விடைபெற்றுக் கொண்டு போன பிறகு கனகசபையின் மனைவி அவரை நெருங்கி, "நானும் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டுதான் இருந்தேன்.... உங்களுக்கென்ன பைத்தியமா பிடித்துவிட்டது? யாரோ நண்பர் சொன்னார் என்பதற்காக இப்படியா சம்பாதித்ததையெல்லாம் தூக்கி வரிக்காரன் கையில் கொடுப்பது?" என்று கோபித்துக் கொண்டாள்.

கனகசபை ஒரு புன்முறுவல் பூத்தார். "அடி அசடே! நானா பைத்தியக்காரன்?... என்னிடம் நிறையக் கருப்புப் பணம் இருக்கிறது என்பது கூவத்திலே நாற்றம் இருக்கிறதைப் போல ஊரெல்லாம் தெரிந்த சமாசாரம்.... வேலையற்ற வேறு எவனும் மொட்டைக் கடிதாக எழுதிப் போடுவதற்கு முன்னால் நாமே போட்டால் நல்லது என்று எண்ணினேன்..... முதலிலே நான் சொன்னதை நம்பாத அதிகாரிகள் இங்கு வந்து பார்த்து நான் சொல்வது உண்மைதான் என்பது தெரிய வந்ததும் எப்படி அசந்து போனார்கள் பார்! நான் சொன்ன இடங்களிலே இருந்ததையெல்லாம் எடுத்துக் கொண்டார்கள்.... எனக்கு அதிலே பத்து சதவிகிதம் பரிசும் கொடுப்பதாகச் சொல்லியிருக்கிறார்களே!....."

"அது போதுமாக்கும்.....?"

"போதவில்லை என்றால் சமையலறையிலும் கார் ஷெட்டிலும் தோட்டத்தில் அவரைப் பந்தல் கீழேயும் பூமியைத் தோண்டி வேண்டிய பணத்தையும், தங்க பிஸ்கட்டுகளையும் எடுத்துக் கொண்டால் போயிற்று! அவர்கள்தான் அவற்றைத் தொடக்கூட இல்லையே!.... ஏதோ மூன்று இடங்களில் மட்டும் தான் ரூபாய் நோட்டுக்களை ஒளித்து வைத்திருப்பதாக நான் சொன்னேன்.... முதலில் நான் சொன்ன நிஜத்தை நம்ப மறுத்தவர்கள் கடைசியில் நான் சொன்ன பொய்யை அப்படியே ஏற்றுக் கொண்டுவிட்டார்கள் பார்! என் நண்பர் சொன்னது சரியாகத்தான் போய்விட்டது!....."

"யாருங்க அந்த நண்பர்?"

"அவர் இப்போது இல்லை; செத்துப் போய்விட்டார். அவர் பெயர் நகர்வாலா!" என்றார் கனகசபை!

# தலையாய கூந்தல் அலங்கார நிபுணர்கள் சிபாரிசு செய்வது க்ளீம் ஷாம்பு— கேசத்தைப் பட்டுப்போல் சுத்தமாகவும், படியும்படியும் வைப்பதற்கு.



க்ளீம் ஷாம்பு கார நீரிலும் மென்னீரிலும் நுரை கொழிக்கச் செய்கிறது. கேசத்தைத் துப்புரவாக சுத்தம் செய்கிறது. பட்டுப் போலவும் பளபளப்பாகவும் ஆக்குகிறது.



புது டில்லியைச் சேர்ந்த கூந்தல் அலங்கார நிபுணர் மேடம் பி. ராய் க்ளீம் ஷாம்புவைப் பாராட்டு கிறார். "கேசத்தை மிருதுவாகவும் படியும் படியும் வைக்கிறது. கேசம் நீளமானாலும் குட்டையானாலும் விரும்பும் வகையில் படியவைக்க உதவு கிறது க்ளீம்" என்கிறார் அவர்.

க்ளீம் ஷாம்பு கேசம் படிவதற்கும் நவீன கூந்தல் அலங்காரத்துக் கும் துணை புரிகிறது.



அதன் பிரெஞ்ச் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள். அதிகபட்ச சிக்கனம் பெற 400 மி.லி. பாட்டில் வாங்குங்கள்.






# க்ளீம் ஷாம்பு

**கார நீரிலும் மென்னீரிலும் நுரை கொழிக்கிறது**

3 சைஸ்கள் : 100 மி.லி., 200 மி.லி., 400 மி.லி.

Geoffrey Manners & Co. Ltd.

G.37

# அசலான ஸிங்கர்*
# ஊசிகளில் மட்டுமே
# ஸிங்கரின்
# பெயர் உள்ளது.




**ஸிங்கர்*** பெயர் உள்ளதா என்று பார்த்தே ஊசிகளை வாங்குங்கள். அவைதாம் அசலானவை. சூடேறாமல், 50 லட்சம் தையல்களுக்கும் அதிகமாக சிறப்பாக தைக்கின்றன. **ஸிங்கர்*** ஊசியின் முனை 'மைக்ரோஃபினிஷ்' செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஊசியும் அமைப்பில் ஒரே சீராக, தரமுயர்ந்து, தொல்லையுறாது, நம்பகத்துடன் உழைக்கிறது. வெவ்வேறு வகையான தையல்கள் மற்றும் சித்திரத் தையல்களுக்காக பல்வேறு நம்பருள்ள ஊசிகள் கிடைக்கின்றன. அவற்றை எந்த மெஷினிலும் எளிதில் பொருத்தலாம்.

இந்தியாவெங்கும் கிடைக்கிறது.




**ஸிங்கர்** அளிப்பவை சிறந்த பொருட்களே

தயாரிப்பாளர்கள்:

**ஸிங்கர்-டிவிஎஸ் லிமிடட், மதுரை**

வர்த்தக விவரங்களுக்கு தொடர்பு கொள்க:

ஸிங்கர் ஸூயிங் மெஷின் கம்பெனி,

207, டி. என். ரோடு, பம்பாய்-400 001

* ஸிங்கர் கம்பெனியின் டிரேடு மார்க்


Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

பவுடரினால் துலக்கிய
பாத்திரத்தின் மீது பொடிக் கசடு
பின்தங்கியிருக்கிறதா?

# மாசில்லாத பளபளப்பை வீசிட வைப்பது விம்.

**கசடு இல்லை!**
**பிசுக்கு இல்லை!**
**கீறல் இல்லை!**



